REGD. NO. M. 4392

# டயபெப்ஸின்




ஆகாரம் சரிவர ஜீரணமாக டயஸ்டாஸ், பெப்ஸின் என்னும் இருவகைப் பொருள்கள் அத்யாவசியமானவை. இவைகள் இரண்டும் உயர்ந்த ரசாயன முறையில் சேர்த்ததுதான் டயபெப்ஸின். ஆகாரத்துக்குப்பின் ஒரு டீஸ்பூன் டயபெப்ஸின் உட்கொண்டால் ஜீரணச் செயல் தக்ஷணமே ஆரம்பித்து, பாக்கி ஜீரண வேலை வயிற்றுக்கு மிக எளிதாகிறது. உங்கள் ஆகாரத்தின் முழுப் போஷணையும் அடைய இதுவே சிறந்த மார்க்கம்.

**யூனியன் டிரக், கல்கத்தா**

ஏஜண்டுகள்: அப்பா அண்டு கோ., மதராஸ்
மற்றும் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**UNION DRUG. CALCUTTA**

---

# ஐடியால் இணையற்றது

**விஷம் எதிர்ப்பது — கிருமி நாசனி**
**புத்துயிரளிக்கிறது — விஷமற்றது**







தயாரிப்பாளர்கள்
மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரி லிட்.,
மல்லேஸ்வரம், பெங்களூர்.

விநியோக ஏஜண்டுகள்:
**பெஸ்ட் & கம்பெனி லிமிடெட்.**
தபால்பெட்டி நெ. 63, மதராஸ்.

## முன்னேற்றத்தின் முன்னணியில்

# எஃகு இந்தியாவின் எல்லைகளை இணைக்கிறது.....



இந்திய பிரதேசத்தின் மூலமாக புதிதாக அமைக்கப்பட்ட நீ 142½ மைல் மீட்டர் கேஜ் ரெயில்வே லைன் (இருப்புப்பாதை) போக்குவரவு சாதனத்திற்காக இப்பொழுது திறக்கப்பட்டிருக்கிறது. இப்பாதை அஸ்ஸாமை இந்தியாவுடன் இணைக்கிறது. எதிர்பார்த்ததற்கு மாறாக, இப்பெரிய இடம் அநேக மாதங்கள் முன்பாகவே முடிக்கப்பட்டுவிட்டது.



இப் பிரம்மாண்டமான காரியம் முடிவுபெற சாதகமாக இருந்தது—ரயில் பாதைகளும் (ட்ராக்குகள்) மற்றும் அநேக இதர ரூபங்களில் உபயோகிக்கப்பட்ட எஃகும் தவிர— 7000டன் இந்திய எஃகே.

# டாடா எஃகு

டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட்,
தலைமை சேல்ஸ் ஆபீஸ்: 23B நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா.

டாயம் பெண்ணைப் பார்க்க வரவேண்டும்" என்று மிக உருக்கமாய் வேண்டியவர்களும் எத்தனையோ பேர்.

சரியான ஜாதகம் கிடைக்காததால் பல குடும்பங்களில் பெண்கள் ஹைஸ்கூல் படிப்பை முடித்த பிறகு காலேஜில் சேர்க்கிறார்கள். இண்டரில் படிக்கும்பொழுதே 'ஜாதகமும், பொருந்த வேண்டும். பி. ஏ. படித்த பிள்ளையாகவும் இருக்க வேண்டும்' என்ற நிர்ப்பந்த நிலை ஏற்படுகிறது. அவ்வித வரன் அவ்வளவு சுலபமாகக் கிடைத்து விடுகிறதா?—இல்லை. அதனால் அத்தகைய வரன் கிடைக்காத பெண் பி. ஏ. வகுப்பில் சேருகிறாள். இப்பொழுது இந்தப் பெண்ணுக்கு எம். ஏ. படித்த வரன் தேவை! ஆனால் கல்லூரிப் பெண்களை விரும்பி மணம் செய்துகொள்ள வேண்டிய மனோநிலை தற்கால யுவர்களுக்கு இல்லை.

ஆகையால் 'செவ்வாய் தோஷம்' 'ஆயில்ய நட்சத்திரம்' என்றெல்லாம் கூறி நம் பெண்களைப் பாட்டிகளாக்குவதைவிட மனப் பொருத்தம் பார்த்து மணம் செய்வித்தல் மிகவும் நல்லது என்று எண்ணுகிறேன்.

திருநெல்வேலி
22—1—50 எல். எஸ். பார்த்தசாரதி

★

## ஒரு வேண்டுகோள்!

நான் ஒரு ஆறும் பாரம் படிக்கும் மாணவன். ஆறும் பாரத்தில் படிக்கும் மாணவர்கள் சார்பில் ஒரு விஷயத்தைக் கூற விரும்புகிறேன். இன்னும் கொஞ்ச நாளில் நாங்கள் சர்க்காருக்குப் பணம் கட்டிப் பரீட்சை எழுதுவோம். அப்படி நாங்கள் எழுதும் பரீட்சையின் விடைத்தாள்கள் மற்ற ஊர்களில் உள்ள ஆசிரியர்களுக்குத் திருத்துவதற்கு அனுப்பப்படும். அவற்றைத் திருத்தும் ஆசிரியர்கள் தங்கள் குடும்பத்தில் உண்டாகும் வருவாய்க் கஷ்டம், கோபம், தாபம் முதலியவைகளுக்கேற்ப மார்க் போடுவது வழக்கம்.

ஆசிரியருக்கு வீட்டிலிருக்கும்போது கோபம் ஏற்பட்டால் நன்றாகப் பரீட்சை எழுதியுள்ளவன் பாடே திண்டாட்டமாகத்தான் இருக்கும். பின் சுமாராய் எழுதியுள்ள பையனுடைய நிலைமையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஆனால் வீட்டில் இருக்கும் நிலைமை ஆசிரியரைச் சந்தோஷத்துக் குள்ளாக்கினால் சுமாராய்ப் பரீட்சை எழுதியுள்ளவன்பாடு கொண்டாட்டமாக முடியும். பின் நன்றாய் எழுதியுள்ளவன் வாங்கும் மார்க்குக்கு என்ன குறை?

ஏழைகளாகிய நாங்கள் கட்டியிருக்கும் பரீட்சைக்கு ரூபாய்க்கும் ஒரு வருடப் படிப்புக்கும் ஒருவருடச் சம்பளத்துக்கும் ஒரு வருடத்துக்கும் பழுது வாராமல் பாதுகாத்தருள வேண்டிய பொறுப்பு ஆசிரியர்களின் மனைவிமார்களது. ஏப்ரல், மே இரு மாதங்கள் வரை பரீக்ஷைப் பேப்பர்கள் திருத்தும் ஆசிரியர்கள் கோபமுறுதபடி நடந்து கொள்ளுமாறு தாழ்மையுடன் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

பொன்னமராவதி
20—1—50 எஸ். சுப்பிரமணியன்

★

## நல்ல முயற்சி

ஜனவரி 15-ம் தேதி 'கல்கி' இதழ் 'வட்டமேஜை'ப் பகுதியில் தாங்கள் வெளியிட்ட, மதுரை அன்பர் வி. ஜி. சீனிவாசன் அவர்களின் 'F. Z. பற்றி' என்ற கடிதம் பாராட்டப் படவேண்டியதே.

பெரியார் சுந்தரனாரின் முறைப்படி ஆய்த எழுத்தை உபயோகப் படுத்துவதன் மூலம், ஏற்கெனவே மிகைப்பட்டுக் கிடக்கும் தமிழ் எழுத்துக்களோடு இன்னும் புதிய அச்சுப் பொறிகளை (Types) சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லாமல் போகும். ஆனால் ஆய்த எழுத்தோடு சொற்களைத் தொடங்குவது (வழக்கத்தில் அவ்வளவாக இல்லாத ஒரு எழுத்துக்கு அதிகப் புழக்கம் ஏற்படுத்துவதைத் தவிர்த்து) அத்தனை உசிதமாகத் தோன்றவில்லை.

ஆங்கில எழுத்துக்களை அப்படியே தமிழ் எழுத்து வரிசைகளில் சேர்த்துக் கொள்ளும் முறையைக் காரைக்குடி அன்பர் சா. கணேசன் அவர்கள் வாயிலாக பல வருடங்களுக்கு முன்பு, மதுரையிலேயே நடைபெற்ற ஒரு தமிழ்த் திருவிழாவில் நான் கேட்டிருக்கிறேன்.

கொஞ்ச காலத்துக்கு முன்பு சில தமிழ்த் தினசரிகள் தமிழ் எழுத்துக்களுக்கு மேலும், கீழும், பக்க வாட்டத்திலும் கோடுகள் போட்டுப் புதுப் புது உச்சரிப்புக்களைக் குறிப்பிட முயன்றது ஞாபகமிருக்கலாம்.

'கல்கி' தமிழுக்கு 'டானிக்' போன்று அவ்வப்போது வெளியிடப்படும் இத்தகைய முயற்சிகள் சிந்தனையாளர்களின் கவனத்திற்கு வருவது மிகவும் அவசியம்.

பங்களூர்
15—1—50 ஜி. வி. மௌனி

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ "ஒரு யோசனை" என்ற கடிதம் எழுதிய மதுரை ஸ்ரீ கே. வி. முருகனுக்கும், "மணப் பொருத்தம்" என்ற கடிதம் எழுதிய திருநெல்வேலி ஸ்ரீ எல். எஸ். பார்த்தசாரதிக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

களிலும் உள்ள 200 ஏக்கருக்குத் தண்ணீர் காணும். ஏக காலத்தில் குளத்தின் நான்கு புறங்களிலும் 20 மோட்டார் வைத்துத் தண்ணீர் இறைக்கலாம். 'மோட்டார் பம்ப் செட்' வைத்துத் தண்ணீர் இறைப்பதில் செலவும் ரொம்பக் குறைவாகவே ஆகிறது. 10 ஏக்கர் தண்ணீர் பாய்ச்ச ரூ 30 தான் ஆகிறது.

சாதாரணமாகக் கிணறு வெட்டுவதற்கென்று சர்க்கார் கொடுத்து வந்ததில் 500 ரூபாய்க்கு ஒரு கிணறு வீதம் 200 ஏக்கருக்கு 200 கிணறுகள் தேவைப்பட்டன. அவ்வளவுக்கும் ரூபாய் கொடுத்து உருப்படாமல் அடித்ததற்கு உருப்படியாக ஒன்றைச் செய்தால், அப்புறம் அதைச் சுற்றியுள்ள விவசாயிகள் மழையைப் பற்றிக் கவலைப்படுவார்களா? கவலைப்படத்தான் நேரம் இருக்கிறதா?

நாடெங்கும் இம்மாதிரி குளங்கள் பெருகினால் உற்பத்தி தானாகவே பெருகும்.

சின்னஞ் சிறு அணைக்கட்டுகளுக்குத் திட்டம் போட்டு, வேண்டிய தளவாடங்கள் தயார் செய்து பல வருட காலம் வீணாக்கிக் கொண்டே போவதைவிட, உடனடியாக ஆங்காங்கே இவ்வித பெரிய ஏரிகள் வெட்டும் ஏற்பாடு செய்யக்கூடாதா என்பதை என்ஜினீயர்கள் சிந்திக்க வேண்டும்.

மதுரை
22—1—50
கே. வி. முருகன்

★

## ஒரு சந்தேகம்!

“ஜோசியன் என் செயும்?” என்ற தலைப்பில் ஜனவரி 8-ந் தேதி 'கல்கி'யில் தாங்கள் எழுதியிருந்ததைப் படித்ததும் நான் சாஸ்திரம் பார்ப்பதில் தங்களுக்குத் துளிக்கூட நம்பிக்கையோ பற்றுதலோ கிடையாது என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொண்டேன். அத்துடன் தங்கள் மீதும் ஒரு சிறு ஐயம் கொள்ளும்படி ஏற்பட்டு விட்டது. இந்த ஐயப்பாட்டை அகற்ற வேண்டுமென்று தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

முன்பு ஒரு சமயம் தாங்கள் 'கல்கி' வாயிலாக “நாட்டுக்கு ஒரு புதல்வர்” என்ற தலைப்பிட்டு, தெய்வீகத் தலைவர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்களின் புனிதமான வாழ்க்கை வரலாற்றை எழுதினீர்கள்.

அதே கட்டுரை-யில் நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்களைப் பெற்றுத் தந்த சக்கரவர்த்தி ஐயங்கார் தமக்குப் பிறந்த குழந்தையின் ஜாதகத்தைக் கணித்த விவரமும், ஜாதகத்தில் குழந்தை சக்கரவர்த்தி ராஜகோபாலனுர் அவர்கள் “இராமனும் கிருஷ்ணனும் சங்கரரும் இராமானுஜரும் பிறந்த கோத்திரத்தில் பிறந்திருக்கிறார்” என்றும் “அவர்களுடைய ஜாதகங்களின் அம்சங்கள் எல்லாம் இந்த ஜாதகத்தில் இருக்கின்றன” என்றும், “இராஜ யோகமும் இருக்கிறது; வனவாச யோகமும் இருக்கின்றது; ஜனங்கள் ஓஹோவென்று தோத்திரமும் செய்வார்கள்; 'போ! போ!' என்று விரட்டியும் அடிப்பார்கள்; சக்கரவர்த்தியின் சிம்மாசனத்திலும் இவன் வீற்றிருப்பான்; ஏழையிலும் ஏழையாகக் குடிசையிலும் வசிப்பான்” என்று கண்டு கொண்டதாக எழுதியிருக்கிறீர்கள். ராஜாஜி பெருமானுக்கு இவ்வளவும் ஏற்படும் என்று ஏறக்குறைய எழுபத்தொரு ஆண்டுகளுக்கு முன்பாகவே ஜாதகத்தின் உதவியால் ராஜாஜியின் தகப்பனுர் கண்டு கொண்டார் என்பதாக எழுதியிருக்கிறீர்கள். “நாள், கோள்” ஆகியவற்றின் 'மகிமை'யைப் புலப்படுத்தியிருக்கிறீர்கள்.

இப்போது மட்டும் தங்கள் கொள்கையை மாற்றிக்கொண்டு, எங்களைத் திணறித் திண்டாட வைப்பதின் காரணம் என்ன?

சிலோன்
19-1-50
எஸ். நவரத்தினம்

[ரொம்பவும் மன்னிக்க வேண்டும். ராஜாஜி அவர்கள் அடிக்கடி 'இந்த நகைச்சுவை ரொம்பப் பொல்லாதது; அதைச் சரியாக விளங்கும்படி கையாளாவிட்டால் விபரீதமான பொருள் தரும்' என்று சொல்லுவார்கள். அவர்களுடைய வாக்குப் பலித்து விட்டது. ராஜாஜி பிறந்த நாள், வேளை இன்னும் சரியாகத் தெரிந்தபாடில்லை. ஜாதகமும் கணிக்கப் படவில்லை. பின்னால் அவர்களுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்களை வைத்துக்கொண்டு கற்பனையாக 'ஜாதகம்' கணித்ததைப் பற்றி எழுதப்பட்டது. அது வேடிக்கைக் கற்பனை என்பது நன்கு விளங்கவில்லை என்று இப்போது தெரிகிறது. மன்னிக்கவேண்டும். —ஆசிரியர்.]

★

## வருணனின் கருணை

கண்ட்ரோல்கள் இருக்கும் வரை நாட்டு மக்களிடம், சர்க்கார் மீது அதிருப்தி வளர்ந்து வருமே தவிர தளர்ந்து வராது. தற்போதுள்ள நிலையில் நாட்டில் குற்றமற்ற மனிதன் இல்லவே இல்லை என்றுதான் சொல்லவேண்டும். கண்ட்ரோல் பொருள்

கனைக் கள்ள விலைக்கு விற்பது மட்டும் குற்றம் என்றால் அதை வாங்குவதும் குற்றம்தான். அதைச் சாப்பிடுவது அதை விடக் குற்றம். ஆகவே, குற்றம் இல்லாத மனிதன் காண்பது அரிது. வீட்டுக்கொரு கோர்ட்டும், ஊருக்கு ஒரு ஹைகோர்ட்டும் வைத்தால் கூடக் குற்றங்களைச் சரிவரத் தண்டித்துவிட முடியாது.

எந்த மந்திரி எந்த ஊருக்குப் போனாலும், ரேஷன் அரிசி சாப்பிடுவது கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். இந்த நிலைமையில் இந்தப் பாழும் ரேஷனை மகாத்மாஜியின் கொள்கைக்கு விரோதமாய் ஏன் வைத்திருக்க வேண்டும்? கண்ட்ரோல் இருப்பதால் நல்ல மனிதர்களும் கெட்டுப் போகிறார்கள். நல்ல உத்தியோகஸ்தர்களுக்கும் ஒருவிதமான கெட்ட எண்ணம் உதயமாகிறது. நாடு நலம்பெற நல்ல நேரத்தில் ஜவுளி, நூல், உணவு, சிமெண்ட், இரும்பு முதலிய எல்லாக் கட்டுப்பாடுகளையும் அறவே ஒழித்துவிட்டு கிராமங்கள்தோறும் உணவு உற்பத்திச் சங்கமும், மரஞ்செடி வளர்ப்போர் சங்கமும் அமைக்க வேண்டும். மேற்படி சங்கங்களில் தெய்வ பக்தி யுள்ளவர்களைப் பார்த்து சங்கம் அமைக்க வேண்டும். மரம், செடி, பயிர் முதலியவைகள் வளர்த்து நல்ல பயன் கொடுத்து மக்கள் சுபீட்சமாய் வாழ வேண்டும். நாட்டில் மும்முறை மழை பெய்ய வேண்டுமென சங்க அங்கத்தினர்கள் தினந்தோறும் கடவுளைப் பிரார்த்தனை செய்ய வேண்டும். ஆத்மீக சக்தியால் வருண பகவான் மனம் கனிய வைக்க வேண்டும்.

கிணறு வெட்டுவதிலும், யந்திரக் கலப்பை வாங்கிக் கொடுப்பதிலும், மின்சார சக்தியின் பலதரப்பட்ட உதவிகளுக்காகப் பணத்தை ஆயிரமாயிரம் செலவு செய்வதாலும் பணம் பாழாய்ப் போகுமே தவிர, அதிக பலன் ஏற்பட்டு விடாது என்பதே என் தாழ்மையான அபிப்ராயம்.

அருப்புக்கோட்டை
27—1—50

அ. போ. நாராயணன்

★

## கடவுள் வணக்கம்

நமது நாட்டில் நடக்கும் அநேகப் பொதுக் கூட்டங்களில் முதலில் "கடவுள் வணக்கம்" என்கிற ஒரு நிகழ்ச்சி வழக்கமாக நடைபெறுகிறது. அதன் உத்தேசம் இறைவனது அருளை நாடுவதோடு நமது மனதையும் அமைதி பெறச் செய்வதென்று சொல்லலாம். அந்த நிகழ்ச்சி ஏற்படும் போது சபையிலுள்ள யாவரும் எழுந்து நிற்பதும் வழக்கமாயிருக்கிறது. ஆனால் சாதாரணமாக நடப்பது என்னவென்றால் ஒரு நல்ல கீர்த்தனையை அதற்குள்ள சங்கதிகள், பல்லவி, அநுபல்லவி, சரண முட்பட விஸ்தாரமாகப் பாடுவதுதான். அந்தக் கீர்த்தனை முடிவதற்குள் ஜனங்களுக்கு அலுப்பு ஏற்படுகிறது. கவனம் எங்கெல்லாமோ செல்லுகிறது. மனதை ஒரு வழிப்படுத்த உத்தேசித்த அந்த நிகழ்ச்சி நேர்மாறான பலனைக் கொடுக்கிறது. மன அமைதியுடனும் உற்சாகத்துடனும் தொடங்க வேண்டிய காரியம், அலுப்புடனும் சலிப்புடனும் தொடங்க நேருகிறது. சமீபத்தில் இவ்விதக் கூட்டங்களில் "சாதனும் அபிசம்" என்கிற சித்தரஞ்சனி ராகக் கீர்த்தனையைக் கேட்டுக் கேட்டு என் செவிகள் அலுத்தே போய் விட்டன. (இவர்கள் பாடுவது சித்தரஞ்சனி ராகம்தானோ என்பது வேறு விஷயம்!) ஒரு விருத்தத்தையோ ஒரு சுலோகத்தையோ கொஞ்சம் ரஞ்சகமாகச் சங்கீதம் கலந்து பாடினால் ஜனங்கள் நன்றாக ரசிப்பார்கள். அந் நிகழ்ச்சி ஒன்று அல்லது இரண்டு நிமிஷங்களுக்கு மேல் போகாதிருந்தால் ஜனங்கள் ஒருமனப்பட்டுக் கடவுளை நினைக்கவும் கூடும்.

மயிலாப்பூர்
24-1-50

ஆர். சீனிவாசன்

★

## ★ மனப் பொருத்தம்

'செவ்வாய் என்ன செய்யும்?' என்ற தலைப்பில் ஸ்ரீமதி பாக்கியம் அவர்கள் எழுதியுள்ளதை வரவேற்கிறேன். நானும் 'செவ்வாய் தோஷம்' உள்ள ஒரு கட்டை பிரம்மசாரி! இந்த ஜாதகம் பார்க்கும் வழக்கத்தால் பெண்களுக்கு மட்டுமல்ல ஆண்களுக்குக் கூட எத்தனையோ தொல்லைகள் நேருகின்றன.

"என்னுடைய பெண்ணுக்கு மட்டும் 'செவ்வாய் தோஷம்' இருந்தால் உன்னையே என் மாப்பிள்ளையாக்கிக் கொண்டிருப்பேன்" என்று என்னைத் தேற்றியவர்கள் எத்தனையோ பேர்!

"சார்! மூன்று வருஷமாய் என்னுடைய பெரிய பெண்ணுக்கு வரன் தேடி அலைகிறேன். 'செவ்வாய் தோஷம்' உள்ள வரன் கிடைக்கவில்லை. அதற்கு அடுத்த பெண்ணுக்கு மாப்பிள்ளை நிச்சயமாகிவிட்டது. பெரியவளால் சின்னப் பெண்ணின் கலியாணம் தடைப்படுகிறது. நீங்கள் கட்

# வட்ட மேஜை

## ★ ஒரு யோசனை

தமிழ் நாட்டில் 'பஞ்சம் பயமுறுத்துகிறது' என்ற சொல் எங்கும் அடிபடுகிறது. 'ஐயோ மழையில்லையே' என்று அரசாங்கத்தார் கையைப் பிசைகின்றனர். வந்த பின் காக்க வகை கெட்டுத் தடுமாறுவதை விட, வருமுன் காக்க வழி தேடியிருக்கலாம்.

சமீபத்தில் நமது சென்னை அரசினர் 'பாவம், விவசாயிகள் பிழைத்துப் போகட்டுமே' என்று ஒரு திட்டம் கொண்டு வந்து அமுல் செய்தார்கள். அதன்படி கிணறு ஒன்றுக்கு ரூ. 500 முதல் 700 வரை விவசாயிகளுக்குக் கொடுத்து உதவினார்கள்.

விவசாயிகளில் சிலர் எப்படி எப்படியோ சிரமப்பட்டு, யார் யாரை யெல்லாமோ பிடித்து ஒருவாறு பணம் பெற்றுக் கிணறு தோண்டினார்கள். இந்தப் பணம் பெற்றவர்களிலும் வெகு சிலர்தான் உண்மையாகவே கிணறு தோண்டினார்கள். அதுவும் கைவசம் பணம் கொஞ்சம் இருந்ததனால் முடிந்தது. அப்படித் தோண்டிய கிணறுகள் சிலவற்றில் தண்ணீர் வரவும் செய்தது. இவ்வளவு கஷ்டப்பட்டுக் கண்ட தண்ணீரல்லவா? எனவே மோட்டார் வைத்துக் குழாய் மூலம் தண்ணீர் இறைக்க முயல்கிறார்கள். கிணற்றில் ஒரு மணி நேரத்துக்குமேல் தண்ணீர் காணுவதில்லை. மோட்டாரின் இறைப்பு வேகத்துக்குக் கிணற்றின் ஊற்று ஒத்துழைப்பதில்லை.

சரி, மோட்டார் வேண்டாம் மாடுகள் வாங்கி, கவலை போட்டுத் தண்ணீர் இறைக்க முற்படுகிறார்கள். அம்மாதிரி இறைப்பதில் ஆகும் செலவோ, அபாரம்! தண்ணீர் இறைப்பவனுக்குக் கூலி ரூ. 1-8-0. மாட்டிற்குச் செலவு அல்லது வாடகை ரூ. 5-0-0. (இவை இடங்களுக்குத் தகுந்தாற்போல் சற்றுக் கூடவும் இருக்கலாம்.) இந்தச் செலவுடன் ஐந்து நாள் தண்ணீர் இறைத்தால் ஒரு ஏக்கர் நெல் சாகுபடி செய்ய வேண்டிய தண்ணீர் கிடைக்கிறது. இவ்வளவு செலவு செய்தும் இரண்டு ஏக்கர் நிலம் கூடச் சாகுபடி செய்ய முடியாதபடி கைவிட்டு விடுகின்றனர்.

ஏன், இந்தக் 'கடன் வாங்கியும் பட்டினி; கல்யாணம் ஆகியும் பிரம்மச்சாரி' என்ற கதை! வேறு ஒரு நல்ல ஏற்பாடு செய்ய முடியாதா?

ஒரு பெரிய கிணறு ஒன்றை சர்க்காரே வெட்டலாம். 100 அடி நீளம் 100 அடி அகலம் 40 அடி ஆழமுள்ள ஒரு பெரிய தெப்பம் தோண்டுவது. அதில் மேற்கொண்டு 40 அடி ஆழம் நீர் கொப்புளிக்கும் குழாய்களைப் பதித்துவிடுவது. இதைச் செய்து முடித்து விட்டு, தண்ணீர் வேண்டியவர்கள் அவரவர்கள் சொந்த மோட்டாரைக் கொண்டு மேற்படி தெப்பத்திலிருந்து தண்ணீர் இறைத்துக் கொள்ளலாம் என்று கூறிவிடலாம். மோட்டார் வாங்க வசதிப் படாதவர்களுக்கு ஒரு 'மோட்டார் பம்ப் செட்' வாங்கித் தந்து தண்ணீர் வரியுடன் சேர்த்து வருடத்துக்கு ஒரு முறையாக ஐந்து வருடத்தில் வசூல் செய்து விடலாம்.

இதைச் செய்து முடிக்க குளம் ஒன்றுக்கு ரூ. 25,000 முதல் 50,000 வரை இடத்துக்குத் தகுந்தபடி ஆகலாம். இந்தக் குளம் வெட்டத் தேவையான இடத்தைக் கிரயத்துக்கே வாங்கி விடலாம். 'புல்டோசர்' மூலம் சீக்கிரமாகவே தோண்டி விடலாம். இல்லை; டெண்டர்கள் கோரி, காண்ட்ராக்டாகவும் விட்டுவிடலாம். மானம் பார்த்த பிரதேசங்களில் பல வருடங்களுக்கு ஒரு முறை தண்ணீர் பெருக்கும் குளங்களில் நடுவில் இந்தக் குளம் வெட்டி விட்டால் பாக்கிப் பிரதேசங்களை விளை நிலங்களாக்கிவிடலாம். இதன் பயனாக 'நியாமி' களுக்கு அளிக்க நிலம் போதவில்லையே என்று ஏங்க வேண்டியதில்லை. அந்தப் பிரச்னைக்கும் பரிகாரம் இருக்கிறது.

இந்தக் குளம் ஒன்றினால் சுமார் 200 ஏக்கருக்கு மேல் சாகுபடி செய்யலாம். அதாவது இந்த ஏரி சுற்றிலும் நான்குபுறம்

# கௌரியின் கலக்கம்

தாபஸ்

கௌரியின் மனம் அன்று நிம்மதியின்றித் தவித்தது. காலையில் வீட்டை விட்டுப் போன அவளுடைய கணவர் இரவு பத்து மணியாகியும் வரவில்லை என்றால் மனம் எப்படி நிம்மதியாக இருக்கும்.

கௌரியின் கணவருக்குப் போஸ்ட்மேன் உத்தியோகம். ஊருக்குள் கடிதங்களைப் பட்டுவாடா செய்யப் புறப்படுகிறவர் காலையிலும் மாலையிலும் எத்தனையோ தடவை வீட்டுக்கு வந்து போவார். அப்படி வருபவர் அன்று வராததுதான் கௌரியின் கவலைக்குக் காரணம். அன்று காலையில் நடந்த சம்பவம் ஒன்றும் அவள் நினைவுக்கு வரவே கௌரியின் கவலை அதிகமாயிற்று.

அன்று காலை "ரேஷன் நெல் வாங்க வேண்டாமா?" என்றாள் கௌரி.

"வாங்க வேண்டியதுதான். ஆனால் பணத்துக்கு எங்கே போக?" என்றார்.



"எப்போது பார்த்தாலும் இந்தப் பஞ்சப் பாட்டுதானா? உங்கள் கோட்டுப் பையிலுள்ள நிறைய ரூபாயிருக்கிறதே" என்றாள் கௌரி.

"சரிதான்: அது சர்க்கார் பணம். அதைத் தொட்டால் ஜெயிலுக்குப் போக வேண்டியதுதான்!" என்றார் சப்பா ராயுடு.

அந்த நினைவு இப்போது கௌரியின் மனதைப் பாடாகப் படுத்தி வைத்தது. ஒருவேளை சர்க்கார் பணத்தைக் கையாடி விட்டுத் திண்டாடுகிறாரோ என்று பயந்தாள்.

"இந்தத் தபாலாபீஸ் வேலையிலேயே அது ஆபத்தான வேலை. நித்ய கண்டம் பூர்ணாயுசு" என்பார் சப்பா ராயுடு சில வேளைகளில். அந்த நினைவு வேறு கௌரியைக் கதிகலங்கச் செய்தது.

இரவு வெகு நேரமாகி விட்டது; ஊர் அடங்கி விட்டது. எதிர்வீட்டுப் பையன்— ஒரு கடையில் வேலை பார்ப்பவன் — கடையைப் பூட்டி விட்டுச் சாவிக் கொத்துக்களைக் கிலுக்கிக் கொண்டு வந்தான்.

"ஏ, தம்பி! எங்க வீட்டு ஐயாவைப் பார்த்தாயா?" என்று கேட்டாள் கௌரி.

"ஆமாம், அம்மா! சாயங்காலமாக, தபால்கார ஐயாவை மத்தியிலே போகவிட்டு இரண்டு பக்கமும் போலீஸ் ஜவான்கள் அழைத்துக்கொண்டு போனாங்களே என்னாத்துக்கு அம்மா?" என்று கேட்டான் அந்தச் சிறுவன்.

கௌரியின் பயம் இன்னும் அதிகரித்தது. 'தன் கணவன் ஏதோ பெரிய தவறு செய்து விட்டார். அவரை விலங்கிட்டு ஜெயிலில் அடைத்துவிட்டார்கள்' என்று அவள் நெஞ்சு கலங்கிற்று. கண்கள் கசிந்து பெருகின.

அந்தப் பையனை அழைத்துக் கொண்டு நேராகத் தபாலாபீசுக்குச் சென்றாள். ஆபீசு பூட்டிக் கிடந்தது. தன்னாலான மட்டும் கூப்பிட்டாள். கதவை இடி இடியென்று இடித்தாள். யாருமே இல்லை. போலீஸ் கச்சேரிக்கு நேரிலேயே போகலாமா வேண்டாமா என்று தயக்கத்தோடு கேட்டாள். "அப்பாடி! அங்கே நான் வரமாட்டேன்" என்று கண்டிப்பாய்ச் சொன்னான் அச்சிறுவன். ஆகவே, போலீஸ் ஸ்டேஷன் போகாமலே தன் வீட்டை நோக்கித் திரும்பினாள் கௌரி.

கொஞ்ச நேரத்தில் வாசல் கதவு தட்டும் சத்தம் கேட்டது. சப்பா ராயுடு தலைவிரி கோலமாக வருவதைக் கண்டதும் மனத் துயரத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் அவர் காலைப் பற்றிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள். அவர் ஒன்றுமே விளங்காமல் விழித்தார்.

"நீங்கள் என்ன குற்றம் செய்து விட்டீர்கள், உங்களை ஏன் போலீஸிலே பிடித்துக் கொண்டு போனார்கள்?" என்று கண்ணீரும் கம்பலையுமாய்க் கேட்டாள் கௌரி.

"அடி அசடே, போலீஸ் பாராவுடன் அடுத்த ஊர் தபாலாபீசுக்கு நாலாயிரம் ரூபாய் கொண்டு போய்க் கொடுத்து விட்டு இப்போதான் திரும்புகிறேன், அது என் வேலையில் ஒன்று.. பைத்தியம்...நீ வீணாகப் பயந்துபோய் இப்படி அழுகிறாயே" என்றார் சிரித்துக் கொண்டே சப்பா ராயுடு.

ஸ்ரீராமன் போர்க்களம் நோக்கி நடக்கிறான். அதைப் பார்த்து இந்த உலகத்தில் உள்ள முனிவர்கள் முதலான நல்லோர் யாவரும் சந்தோஷப் படுகிறார்கள். பூமாரிப் பொழிகிறார்கள். ஏன்? வானத்தில் உள்ளவர்களுமே சந்தோஷப்பட்டுப் பூமாரி பொழிகிறார்கள் என்று சொல்ல வேண்டும்.

நாற்கடல் உலகமும்
விசும்பும் நாண்மலர்
தூர்க்க,வெஞ் சேனையுந்
தானுந் தோன்றினான்,—
மாற்கடல் வண்ணத்தான்
வளரு மாளிரும்
பாற்கட லோடும்வந்(து)
எதிரும் பான்மையான்.

[நாற்கடல் உலகமும்: நான்கு பக்கத்துக் கடலும் சூழ்ந்த உலகத்தில் உள்ளவர்களும்; விசும்பும்: வானத்தில் உள்ளவர்களும்; நாண் மலர் தூர்க்க: புதிதாய்க் கொய்த புஷ்பங்களை மழையாக, மிச்சம் இல்லையோ என்று சொல்லும்படி பெய்தார்கள்; வெம் சேனையும் தானும் தோன்றினான்; வெம்மை நிறமான குரங்குப் படையும் தானுமாகப் பாசறைக்கு வெளியே தோன்றினான்: மாற்கடல் வண்ணன்: நீல நிறமான விஷ்ணு மூர்த்தியான வண்ணன்; வளரும் மாளிரும் பாற்கடலோடும்: தான் பள்ளி கொள்ளும் அந்த மிகப் பெரிய பாற் கடலோடும்; வளரும்: கண்வளரும், தூங்கும்; வந்து எதிரும் பான்மையான்: வந்து காட்சி கொடுத்தான் என்னும் தன்மையனான ராமன்—தோன்றினான்.]

கம்பரும் கதா பாத்திரங்களோடு சேர்ந்து கொள்ளுகிறார். ராமன் யுத்தத்துக்குப் புறப்பட்டு விட்டான் என்ற மாத்திரத்தில் கவிஞருக்கே உத்ஸாகம் உண்டாய் விடுகிறது.

பூமியில் உள்ளவர்கள் பூமாரி பெய்கிறார்கள் என்று படுகிறது; பிறகு தேவர்களும் பூமாரி பெய்கிறார்கள் என்று படுகிறது.

கதா நாயகன் என்ற மாத்திரத்தில் பக்தியில் ஈடுபடுகிறார்: அப்படி ஈடுபடுவது காரணமாகக் கடவுள் என்றும் விஷ்ணுமூர்த்தி என்றும் சொல்ல நேருகிறது.

பக்தி உள்ளத்தின் உண்மையான இயல்பை வெளியிடுகின்றன மேற்கண்ட இரண்டு பாடல்களும்.



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 281. பாற்கடலோடு வந்தான்.

ராவணன் போர்முனைக்கு வந்தான். அப்படி வந்ததைத் தூதுவர் போய் ராமனிடம் சொன்னார்கள். தூதுவர் சொன்ன மாத்திரத்தில் அவனுக்கு மிக்க திருப்தி உண்டாயிற்று— ஒளிந்து கொண்டிராமல் எதிராக வந்துவிட்டான் அல்லவா என்று.

•••

மர உரியைக் கொய்த மடிப்புகளுடனே அரையில் இறுகக் கட்டுகிறான் ராமன். அதன்மேல் இடது பக்கத்தில் வாளாயுதத்தை இறுகக் கட்டுகிறான்.



பையன் :—நீ போய்ப் படி ! அப்பா கன்னத்திலே அறுத்துப்பார், அப்போ உன்னைக் கூப்பிடறேன்.

தொடையுறு வற்கலை
ஆடை சுற்றி,மேற்
புடையுறு வயிரவாள்
பொலிய வீக்கினான்,
இடையுறு கருமத்தின்
எல்லை கண்டவர்
கடையுறு நோக்கினிற்
காணும் காட்சியான்.

[தொடையுறு வற்கலை ஆடை சுற்றி : மடிப்புகளுடன் வைத்திருந்த மர உரியான ஆடையை முதலில் கட்டி ; மேல் புடையுறு வயிரவாள் பொலிய வீக்கினான் : அதற்கு மேல் இடது பக்கத்தில் கூர்மை வாய்ந்த வாளை அழகு பெறக் கட்டினான்—யார் ?

இடையுறு கருமத்தின் எல்லை கண்டவர் : கடவுளைக் காண வேண்டும் என்பதற்கான பக்தி சாதனங்கள், யோக சாதனங்கள் எல்லாவற்றையும் தீவிரமாகச் செய்து, கடைசியில் அந்தச் சாதனமும் ஆணவத்தின் செயல் தான் என்று கண்டு அவைகளை விட்ட யோகிகள் ; கடையுறு நோக்கினிற் காணும் காட்சியான் : முடிவாக அநுபவ மூலமாக ஒன்றுமிக் காணும் தன்மையுள்ள கடவுள், அதாவது இராமன்.

புடையுறு வயிரவாள்
பொலிய வீக்கினான்.

குறிப்பு :—ராமாயணத்தின் லக்ஷ்யமாக தர்ம யுத்தத்தை வைத்திருக்கிறது. அந்த யுத்தத்திற்கு யுத்த சன்னத்தனாக விளங்குகிறான் தியாக மூர்த்தியாகிய கதா நாயகன்.

உணர்ச்சியை எழுப்பக் கூடிய கட்டம் அல்லவா இது? அதனுள் ராமனைக் கடவுளாகப் பாவித்து அநுபவிக்கிறார் கவிஞர் கம்பர்.]







# Jasmine

## TOILET SOAP

## பாஸ்வா - ஜாஸ்மின்

ஸ்னான சோப்பு!

NAS 416

**பொன்னான மேனியும் குன்றாத குதூகலமும்......**

முகம் கழுவினாலும், கைகளை அலம்பினாலும் வழக்கமாக ஸ்னானம் செய்தாலும் பாஸ்வா ஜாஸ்மின் சோப்பை உபயோகியுங்கள். வெண்மையான நுரை சருமத்தை மிருதுவாகவும் பளபளப்பாகவும் ஆக்குவதுடன் அதன் நறு மணம் நாள் முழுதும் உங்களை உற்சாகமுடன் இருக்கச் செய்யும்.

**இன்றே ஒரு சோப் வாங்குங்கள்**

பம்பாய் சோப் பாக்டரி
பம்பாய்
(ஸ்தாபிதம்: 1904)

ஏஜண்டுகள்
ஜெய் ஹிந்த் ஏஜன்ஸீஸ்
2/9, பந்தர் தெரு, ஜி. டி., மதராஸ்

---

## இந்த அபூர்வமான

# PEPS

**சுவாசக் கோளாறு, இருமல், ஜலதோஷம் இன்ப்ளுயன்ஸா ஆகியவற்றை ஒழிக்கிறது**

பெப்ஸ் மாத்திரையை வாயில் போட்டுக் கொண்டவுடனேயே, அதிலுள்ள இனிய மருந்து சத்துக்கள் சுவாஸத்துடன் கலந்து சுவாஸப் பைக்குள் செல்லுகிறது. அதனால்தான் பெப்ஸ் வெகு விரைவில் இருமலை ஒழித்து நெஞ்சுக்கும் தொண்டைக்கும் இதம் அளித்து அபாயகரமான கிருமிகளை அழித்து, சுவாசாசயக் கோளாறுகளிலிருந்து உங்களை விடுவிக்கிறது.





## PEPS

மார்பு சளைப்பை உபத்திரவங்களுக்கு மிகவும் இன்றியமையாத சிறந்த மாத்திரைகள்

கடைசியாக, "நான் கண்டாபுரத்து அதிபதியைக் காணமுடியுமோ?" என்று சற்று நிதானமாகக் கேட்டான்.

"இப்பொழுதே, போகலாம்!" என்று சொல்லிக் கொனக்தானைக் கொலு மண்டபத்துக்கு இட்டுச் சென்றான் குமரப்பா.

அவர்கள் உள்ளே நுழைந்ததும் வீற்றிருந்த அமைச்சர்கள், பிரபுக்கள் எல்லோரும் எழுந்து நின்றனர். சிம்மாசனம் காலியாக இருந்தது.

"மகாராஜா எங்கே?" என்று கொனக்தான் ஆச்சரியத்தோடு கேட்டான்.

"யார் இங்கே வந்ததும் சபை நின்று மரியாதை செய்து இன்னும் உட்காராமல் இருக்கிறதோ அவர்தான் மகாராஜா."

சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான் கொனக்தான். வேறு யாரேனும் அந்தச் சமயத்தில் உள்ளே வந்தார்களோ என்று பார்த்தான். ஒருவரும் தென்படவில்லை.

"அப்போது நம்மிருவருள் யாரோ ஒருவர்தான் மகாராஜாவாக இருக்க வேண்டும்" என்றான் கொனக்தான்.

குமரப்பா சிரித்துக்கொண்டு, சிம்மாசனத்தில் போய் அமர்ந்தான். கொனக்தானையும் பக்கத்தில் அமரச் செய்து சபையோருக்கு முந்திய வாரம் நடந்த வரலாற்றை யெல்லாம் கசப்பின்றி விரிவாக எடுத்துச் சொன்னான்.

அமைச்சர்களுள் ஒருவர், "அரசனுக்கு இழைத்த அவமானத்துக்காக இப்பட்டிக் காட்டானுக்கு நாம் ஏன் மரண தண்டனை கொடுக்கக்கூடாது?" எனக் கர்ஜித்தார்.

"அவனைச் சிறையிலாவது இடவேண்டும்" என வேறு சிலர் கோபமுடன் கூறினார்கள்.

இவைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டே, சிரித்த வண்ணம், ராஜா குமரப்பா சொன்னார்:

"நீங்கள் சொல்வதெல்லாம் தகாது. அவன் நேர்மையும் பண்பும் புய வலியும் பெற்ற வீரன். சமயத்தில் தன் புய வலியைப் பிறர் மறக்காதவாறு காட்டக் கூடிய திறனும் வாய்ந்தவன். தோற்றம், பேச்சு இவை கடினமே யன்றி, மிக்க தயாள குணம் படைத்தவன். இப்பெரும் குணம் வாய்ந்த பெரியோர் படை வாழ்க. அவன் வாழும் கிராமத்தை என் இதய பூர்வமாக அவனுக்குச் சர்வமான்யமாகக் கொடுக்கிறேன்."

இதைக் கேட்டதும் கொனக்தான் அப்படியே திகைத்து நின்றான்.

# போகச் சொல்லுங்கள்!

"உங்களைத்தானே! முதலில் நம்ம சமையல்காரன் சாம்புவை வீட்டை விட்டு விரட்டுங்கோ!" என்றாள் காமாட்சியம்மாள்.

"ஏண்டி? அவனை ஏன் விரட்டச் சொல்லுகிறாய்? அவன் என்ன அப்படித் தலைபோகிற காரியம் செய்து விட்டான்?" என்றார் ஸ்ரீமான் லக்ஷ்மணய்யர்.

"விடிய விடிய ராமாயணம் கேட்டுவிட்டு ராமர் சீதைக்குச் சித்தப்பா என்றானாமே, அந்தமாதிரியன்னா இருக்கிறது நீங்கள் கேட்கிறது? நேற்றைக்கு மோட்டூர் ஜமீன்தார் சங்கரய்யர் சாப்பிட வந்தபோது அவன் சமைச்ச லக்ஷணத்தைப் பார்த்தேளோன்னோ?"

"ஏன் நன்றாகத்தானே சமைத்திருந்தான். அவர்கூட ரஸம் ரொம்ப ஜோராக இருக்கு, உப்பு ரொம்ப சரியாகப் போட்டிருக்கிறான்; வடை மெதுவாக ரொம்ப நன்றாக இருக்கு; பாயசம் பச்சைக் கற்பூரம் வாசனையுடன் கம கமவென்று இருக்கு என்று வாயாரப் புகழ்ந்து கொண்டே தானே சாப்பிட்டார்!"

"சரிதான் போங்கோ! நீங்கள் அவர் சொன்னதை யெல்லாம் வாஸ்தவம் என்று நம்பிட்டேளோ! ரஸம் உப்பா கரிக்கிறது; வடை கல்லாக இருக்கிறது; பாயசத்தில் வாசனையே இல்லே என்பதை நாசுக்காக அவர் சொன்னால் இப்படிப் புரிந்துகொண்டு விட்டீர்களே?" என்றாள் காமாட்சியம்மாள்.

இனியும் லக்ஷ்மணய்யர் சும்மா இருக்க முடியுமா? அம்மாள் உத்தரவுப்படி சமையலறைக்குச் சாம்புவுக்குச் சீட்டுக் கிழிக்கும் உத்தேசத்துடன் போனார். போனவர் அடுத்த கணம் திரும்பிவிட்டார்.

"என்ன? அவனை அதற்குள் அனுப்பி விட்டீர்களா?" என்றாள் அம்மாள்.

"இல்லே......அவனைக் காணவில்லை. அவனுக்குப் பதில் இந்தக் கடிதம் அஞ்சறைப் பெட்டி மேலிருந்தது! இதோ படிக்கிறேன் கேள்:

மகா-ள-ள-ஸ்ரீ எஜமானர் அவர்களுக்கு நமஸ்காரம். இப்பவும் மோட்டூர் ஜமீன்தார் சங்கரய்யர் நேற்று என் சமையல் சாப்பிட்டு ரொம்பவும் திருப்தி கொண்டு, உடனே தம்முடன் என்னை வரச் சொல்லி அழைத்துப் போகிறார். உங்களிடம் சொல்லிக் கொண்டு போக நேரமில்லை. மன்னிக்க வேணும்.

இப்படிக்கு,

சாம்பு.

சாப்பாடு எளியதாயினும் மனதிற்கு உகந்ததாகவும் வயிறு நிரம்பவும் இருந்தது. வழக்கம்போல் சொனந்தான் தனது முரட்டு ஹாஸ்ய ஸ்வபாவத்தோடு குமரப்பாவுடன் அளவளாவிக் கொண்டே சாப்பிட்டான். சாப்பிடும் பொழுதும் குமரப்பா தப்பியபாடில்லை. முதுகில் இடையிடையே சொனந்தான் அவனுக்குச் 'சொட்டு'க் கொடுத்துக் கொண்டே யிருந்தான்.

இவ்வளவு 'அன்பு'டன் சொனந்தான் உபசரிக்கவே, குமரப்பாவுக்கு அவனைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று. அவன் என்ன தொழில் செய்கிறான்; எப்படி ஜீவனம் செய்கிறான் என்றெல்லாம் அறிய ஆவல் ஏற்பட்டது. அதனால் குமரப்பா "அது சரி, நீங்கள் செய்யும் தொழில் என்ன?" என்று கேட்டு விட்டான்.

"வியாபாரம்!"

"என்ன வியாபாரம்?"

"துணி?" என்றான்.

"துணியா?" என்று சற்று ஆச்சரியத்தோடு கேட்டான் குமரப்பா.

"ஆமாம். இந்தப் பக்கங்களில் நெய்பவர்கள் தாமே சரக்கைச் சந்தைக்கு எடுத்துச் சென்றால் மிகவும் குறைந்த விலையில் விற்கவேண்டி யிருக்கிறபடியால், நானே எல்லாவற்றையும் திரட்டிச் சந்தையில் விற்றுத் தொழிலாளிகளுக்கு உரிய பாகத்தைச் சேர்ப்பிக்கிறேன்" என்றான்.

இதைக் கேட்டதும் இவன் எவ்வளவு பெரிய பரோபகாரி என்ற எண்ணம் உண்டாயிற்று. அதனால் குமரப்பா, "நான் கண்டாபுரம் சமஸ்தானத்தில் இருக்கிறேன். என் பெயர் குமரப்பா. சம்பளம் குறைவானாலும் எனக்குச் சமஸ்தானத்தில் செல்வாக்குண்டு. நீங்களும் அடுத்த வாரம் அங்கு வந்தால் அரண்மனையைச் சுற்றிப் பார்க்கலாம். கண்டாபுரத்து அதிபதியையும் கண்டு மரியாதை செலுத்த ஏற்பாடு செய்யலாம். தங்கள் துவுளியையும் கொண்டு வாருங்கள். சமஸ்தானத்தில் நல்ல விலையில் விற்றுத் தருகிறேன். அரண்மனையில் குமரப்பா என்று விசாரியுங்கள்; என்னைப் பார்க்கலாம். பாக்கி விஷயங்களை நான் கவனித்துக் கொள்கிறேன்" என்று சொன்னான்.

• • •

அடுத்த வாரம் சனிக்கிழமை யன்று துணிகளில் மென்மையானதாகவும் உயர்ந்ததாகவும் உள்ளவைகளைப் பொறுக்கி யெடுத்துக் கட்டாகக் கட்டிக் கொண்டு சொனந்தான் கண்டாபுரத்திற்குச் சென்றான். ஒருகால் குமரப்பா இல்லாவிடில் என்ன செய்வது என்று தனக்குள்ளேயே சிந்தித்துக் கொண்டே சென்றான் சொனந்தான்.

அரண்மனை வாயிலை அடைந்தான். வாயில் காப்போனிடம் சென்று, "குமரப்பாவை எங்கே பார்க்கலாம்?" என்று கேட்டான்.

"உள்ளே போய் விசாரியுங்கள்" என்று வாயில் காப்போன் அவனுக்குப் பதில் அளித்தான்.

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையிலேயே 'வரணும், வரணும்' என்று சொல்லிக்கொண்டே முக மலர்ந்து அன்போடு வரவேற்றான் குமரப்பா.

"மழை உபத்திரவமின்றிப் பிரயாணமெல்லாம் சௌகரியமாக இருந்திருக்கும் என்று நினைக்கிறேன். இனி நாம் அரண்மனையைச் சுற்றிப் பார்க்கப் போகலாமா?" என்று கேட்டான்.

அதற்குச் சொனந்தான் சம்மதிக்கவே ஓவியச்சாலை, நடனசாலை, பொக்கிஷச் சாலை, இன்னும் அரண்மனையிலுள்ள பல்வேறு பாகங்களையெல்லாம் அழைத்துக்கொண்டு போய்க் காண்பித்தான். எல்லாவற்றையும் பார்த்துவிட்டு ஒரேயடியாகத் திகைத்துப் போனான்.



# ராஜா குமரப்பா



டி. எஸ். ஆர்.

சூரியன் அஸ்தமித்து நாலு நாழிகைக்கு மேலிருக்கும். திடீரென வானம் கருக்க லெடுத்தது; கடும்புயல் கிளம்பிற்று; 'சோ'வென்று மழை கொட்ட ஆரம்பித்தது.

சாலையில் நடமாட்டமில்லை. ஒரு மாட்டு வண்டி மட்டும் சற்று விரைவாகப் போய்க் கொண்டிருந்தது.

வண்டியின் உள்ளே ஒருவன் உட்கார்ந்திருந்தான். நல்ல கட்டை குட்டையான அந்த மனிதனின் கறுத்த அடர்த்தியான மீசை முகம் முழுவதும் பரவி, மீசைதான் முகமோ என்று சந்தேகிக்கும்படி இருந்தது. இது போதாதென்று அவனுடைய பயங்கரமான இடி யொத்த குரல் கேட்பவரை பயமுறுத்தியது.

அவன்தான் கோளந்தான். அவன் பெயரைச் சொன்னாலே அந்த வட்டாரத்தில் அழுத பிள்ளை வாய் மூடுமாம்.

கைத்தறி நெசவுத் தொழிலாளிகள் அதிகம் உள்ள பிரதேசம் அது. அங்கு நெய்யப்படும் துணிகளை யெல்லாம் திரட்டி ஒன்று சேர்த்து, பிரதி வாரமும் சனிக்கிழமை யன்று பத்து மைலுக்கப்பாலுள்ள பூம்பேட்டைச் சந்தையில் கோளந்தான் விற்று வருவது வழக்கம்.

அன்று சந்தையிலிருந்து திரும்பி வரக் கோளந்தானுக்கு வழக்கத்தைவிட அதிக நேரமாகிவிட்டது. சந்தையில் ஏற்பட்ட ஒரு கலவரத்தை இவன் முன் னின்று அடக்கியதே அதற்குக் காரணம்.

வண்டி விரைவாகச் சென்று கொண்டிருந்தது. அந்த மழை இரைச்சலிடையே குதிரையின் குளம்படிச் சத்தம் கேட்டது. வண்டியை நிறுத்தச் சொல்லிப் பின்புறம் திரும்பிப் பார்த்தான். ஒரு ஆசாமி குதிரையின் மேல் வந்துகொண்டிருப்பதைக் கண்டான்.

குதிரை சற்று அருகில் வந்ததும், "யார் அது? குதிரையை விட்டுக் கீழே இறங்கி வண்டியிலே வந்து உட்கார். குதிரையை வண்டியின் பின்புறம் கட்டி விடலாம்" என்று வழக்கமான தன் அதட்டும் குரலில் இரைந்தான்.

மழையில் சொட்டச் சொட்ட நனைந்து வந்த ஆசாமி வண்டியில் ஏறி, பின் பக்கம் சற்று ஓரமாக உட்கார்ந்தான்.

"நனைந்தது போதாதா? நன்றாக உள்ளே வந்து உட்காரப்பா" என்று சொல்லிக் கொண்டே கோளந்தான் அவனைச் சடாரென முன்னுக்கிழுத்தான்.

கீழே சாய விருந்த ஆசாமி சமாளித்துக் கொண்டு, "மழையில் நனைந்தது என்னவோ நனைந்து விட்டேன். அந்த சரம் என்மட்டில் இருந்தால் போதாதா! தங்களுக்கும் அந்த உபத்திரவம் எதற்கு என்று நினைத்தேன்" என்று ஏதோ குழறிச் சொன்னான்.

"பரவாயில்லை, உள்ளே வந்து நன்றாக உட்கார்" என்றான் கோளந்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் வண்டி கோளந்தானுடைய வீட்டு வாசலில் நின்றது. இருவரும் இறங்கினார்கள். குதிரையையும் மாட்டுக் கொட்டத்தில் கட்டச் சொல்லிவிட்டு வாயிற்படியண்டை சென்றதும் "வீட்டுக்குள்ளே முதலில் நீ போப்பா, நீ விருந்தாளி இல்லே" என்று கத்தினான் கோளந்தான்.

குமரப்பா, அதுதான் வந்த ஆசாமியின் பெயர், சற்றுத் தயங்கியவாறு நின்றான். அவன் கழுத்தில் ஒரு கைகொடுத்து லேசாக வீட்டிற்குள்ளே தள்ளினான் கோளந்தான்.

"விபரீதமான வரவேற்பாக இருக்கிறதே! இன்னும் என்னவெல்லாம் நடக்க இருக்கிறதோ! எதற்கும் கடைசி வரை பொறுத்துப் பார்ப்போம்" என்ற துணுச்சலுடன் குமரப்பா உள்ளே சென்றான்.

மழையில் நனைந்திருந்த விருந்தாளிக்கு உலர்ந்த துணி கொடுக்கப் பட்டது. பிறகு இருவரும் சாப்பாட்டறைக்குச் சென்றார்கள். அங்கே இரண்டு மணைகள் போடப்பட்டிருந்தன.

"முன்னே, முதல் மணையில் போய் உட்காரப்பா" என்ற கட்டளை பிறந்தது.

குமரப்பா கொஞ்சம் சங்கோசப் பேர் வழி. தயங்கி நின்று கொண்டிருந்தான். அப்பொழுது அவன் கன்னத்தில் பளார் என்று ஒரு அறை விழுந்தது. கண்கள் கலங்கின. தலை கிர்ரென்று சுற்றிற்று. குமரப்பா, தான் செய்த தவறைப் பனிச் சென்று உணர்ந்து முதல் ஆசனத்தில் சட்டென்று அமர்ந்து விட்டான்.

# குடியரசு பிறந்தது



பாபு ராஜேந்திர பிரஸாத்துக்கு ஜனாதிபதி பட்டம் கிடைத்தது.



சிறையில் வாடிய கைதிகளுக்கு விடுதலை கிடைத்தது.



ராஜாஜிக்கு இலக்கிய தொண்டில் ஈடுபட சந்தர்ப்பம் கிடைத்தது.



பள்ளிக்கூட மாணவர்களுக்கு இரண்டுநாள் லீவு கிடைத்தது.



பிரமுகர்களுக்கு விருந்து சாப்பிடவும் கொடி ஏற்றவும் பிரசங்கம் செய்யவும் சந்தர்ப்பம் கிடைத்தது.



தமிழ் மக்களுக்கு "கல்கி" குடியரசு மலர் கிடைத்தது.

விற்றே, டிபன் சாப்பிடுவதற்கும் அவன் கையில் பணம் இருக்காது. அந்த நேரத்தில் கண்ணாயிரத்தின் சிநேகிதனை ராஜாபாதரிடம் ஒரு இரண்டு ரூபாயைக் கொடுத்து அவனை ஹோட்டலுக்கு அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்யவேண்டும். அந்த நேரத்தில், தான் சைக்கிளை எடுத்துக் கொண்டு அங்கே போகவேண்டும். கண்ணாயிரம் 'பீட்'டில் இருக்க மாட்டான். அவ்வளவுதான்!

கண்ணாயிரம் வேலையில் கவனக் குறைவாக இருந்து எத்தனையோ உயிர்களுக்கு ஆபத்தை உண்டாக்க இருந்ததாக 'ரிபோர்ட்டு'. அப்புறம் விசாரணை; கண்ணாயிரத்தின் தொப்பி இறக்கப்படுதல்!— சங்கரன் கழுல் காற்கானியை ஒரு சுற்றுச் சுற்றி விட்டு, 'சபாஷ்!' என்றார். முகத்திலே இளநகை அரும்பியது. கண்ணாயிரத்தைப் பழிக்குப் பழி வாங்கிவிட்டால் இள நகை பெரு நகையாக மலரும், சிரிக்கத் தயாராகிக் கொண்டிருந்தார்!

அச்சமயம் ராஜாபாதர் எதிர்பாராத விதமாக அங்கு வந்து சேர்ந்தான். "எசமான்!" என்று எஜமான விசுவாசம் ததும்பக் கூறிவிட்டுத் தலையைச் சொறிந்தான்.

"என்ன அப்பா, ராஜாபாதர்! எங்கே இப்படி......?" என்று கேட்டார் சப்-இன்ஸ்பெக்டர்.

"ஒண்ணுமில்லே, எசமான்! சும்மாத்தானுங்க, உங்களைக் கண்டுவிட்டுப் போகலாம்னு வந்தேனுங்க!"

"நீ சும்மா வருவாயா, அப்பா? உன் சேதி எனக்குத் தெரியும். இந்தா, இந்த இரண்டு ரூபாயை வைத்துக்கொள். கண்ணாயிரத்துக்கும் டிபன் வாங்கிக் கொடுத்துவிட்டு, நீயும் நன்றாய்ச் சாப்பிடு!" என்று சொல்லி சப்-இன்ஸ்பெக்டர் தம் 'ட்ரௌசர்' பாக்கெட்டிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்து அவனிடம் கொடுத்தார். ராஜாபாதர் உடம்பைக் கோணலாக வளைத்துக் கூனிக் குறுகி அந்த ரூபாயை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு நகர்ந்தான்.

"சரிதான். கண்ணாயிரத்துக்கு இப்போது எந்த 'பீட்' என்று தெரியுமா?" என்று திடீரென்று நினைவு வந்ததுபோல் கேட்டார் சப்-இன்ஸ்பெக்டர்.

"வடக்கு பீட்டுதானுங்களே!" என்றான் ராஜாபாதர்.

"ஆமாம், எத்தனை மணிக்கு?"

"ஆறு மணிக்கு!"

சங்கரன் திருப்தி யடைந்தார். ராஜாபாதர் எண்ணத்திலே ஒரு பாதம் அல்வா, ஒரு பூரி-கிழங்கு, ஒரு வடை, ஒரு மசால் தோசை,— இவைகள் வலம் வந்து கொண்டிருந்தன.

சங்கரனுடைய எண்ணத்திலே கண்ணாயிரத்தின் 'தொப்பி' இறங்கிக் கொண்டிருந்தது. முழுதும் இறங்க இன்னும் இரண்டு மணி நேரம்தானே இருக்கிறது?

## 3

ஆதவன் மறைந்தான். இருள் சூழ்ந்தது. கடிகாரத்தைப் பார்த்தார் சங்கரன். மணி ஆறு!

சப்-இன்ஸ்பெக்டர் சங்கரன் ஓரே பாய்ச்சலில் சைக்கிளை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். கண்ணாயிரம் 'பீட்' நிற்கும் இடத்துக்கு வந்தார். அவன் கனஜோராகத் தன் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தான். சப்-இன்ஸ்பெக்டருக்கு அவனை அங்கே பார்த்ததும் கொஞ்சம் தூக்கி வாரிப் போடத்தான் செய்தது. ராஜாபாதர் வாக்குத் தவறிவிட்டானா, என்ன? அவ்வளவு பெரிதாகத் தலையை ஆட்டினானே, முட்டாள்!

சப்-இன்ஸ்பெக்டர் தம் மனதில் எழுந்த குழப்பங்களை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. கண்ணாயிரம் அவருக்கு 'ஸல்யூட்' வைத்தான். சங்கரனும் அதை விறைப்புடன் அங்கீகரித்தபடி அங்கிருந்து மெள்ள நழுவினார்.

அரை பர்லாங்கு தூரம் போயிருப்பார் சங்கரன். எதிரே வந்த ராஜாபாதர் அவரைக் கண்டதும் நின்று சலாம் செய்தான்.

சப்-இன்ஸ்பெக்டர் சங்கரனுக்கு அவனைப் பார்த்ததும் வந்த கோபம் கொஞ்ச நஞ்சமல்ல. இருந்தாலும் அதைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, "என்னடா, கண்ணாயிரத்தை விட்டு விட்டு நீ மட்டும் டிபனைத் தீர்த்துக் கட்டிவிட்டாயா, என்ன?" என்றார் ஓர் அசட்டுச் சிரிப்புடன்.

"இல்லே, எசமான்! நீங்க சொன்னபடியே கண்ணாயிரத்தைப் பார்த்தேன். டிபன் சாப்பிடக் கூப்பிட்டேன், 'எனக்கு டூட்டி இருக்கிறது. இங்கேயே டிபனை வாங்கிக்கொண்டு வந்தால் ஒரு நிமிஷத்திலே சாப்பிட்டுப்பிடுவேன்' என்று அவன் கண்டிப்பாய்ச் சொன்னானுங்க. 'சரிதான்'னு நான் மட்டும் போய்ச் சாப்பிட்டுப்பிட்டு அவனுக்கும் வாங்கிக் கொடுத்துப்பிட்டு வாரேனுங்க!" என்றான் ராஜாபாதர்.

சப்-இன்ஸ்பெக்டர் சங்கரனுக்குக் கோபம் பிரமாதமாய்த்தான் வந்தது. ஆனால் அழுவதா, சிரிப்பதா என்றுதான் அவருக்குத் தெரியவில்லை!

டீங்க. அவுங்க பெரிய அதிகாரிங்க; எதுவும் பண்ணலாம். நீங்க ஒரு சாதாரணக் கான்ஸ்டேபிள்தானே?"

"இருந்தா என்னவாம்? நேர்மையா நடந்தா ஒருத்தன் தயவும் நமக்கு வேண்டியதில்லே, தெரியுமா?"

அவன் எவ்வளவோ சொல்லியும் பொன்னமுவின் மனம் சமாதானம் அடையவில்லை. கண்ணாயிரம் வேலையிலிருந்து 'டிஸ்மிஸ்' ஆகி வந்துவிட்டதைப் போன்ற ஆயிரம் ஆயிரம் எண்ணங்கள் அவள் மனதை அரித்தன. மகாராஜாவின் கிரீடம் போன்று அவன் தலையை அலங்கரிக்கும் 'தொப்பி' போய்விட்டால், அந்த அழகுக்காக ஆயுள்வரை ஏங்க வேண்டுமா என்ற இள உள்ளத்தின் கொந்தளிப்பு வேறு.

"பொன்னமு! 'பீட்'டுக்குப் போக நேரமாச்சு; சீக்கிரம் சோறு போடு!"

பொன்னமு சாதம் போடத்தான் செய்தாள்; சாதம் போடும்போது என்றுமுள்ள கலகலப்பில்லை. உள்ளத்தில் கண்ணாயிரத்தின் 'தொப்பி' எடுபடுவதைப்போன்ற ஒரு மாறாத நினைப்பு......

2

அதே சமயத்தில் ஸ்டேஷனிலிருந்த சப்-இன்ஸ்பெக்டர் உள்ளத்திலும் ஒரே நினைப்புத்தான் குடி கொண்டிருந்தது. எப்படியாவது கண்ணாயிரத்தின் தொப்பியை எடுத்தாக வேண்டும்.— அவருடைய மாற்றமுடியாத முடிவு இது.

ஒரு பொடிப் பயல் சொல்லைத் தட்டுவது என்றால்? அதிசயமான, ஆச்சரியமான, திடுக்கிடும்படியான சம்பவம்தான். அவருடைய பத்து வருஷ போலீஸ் ஆட்சியிலே கண்டு வந்த வெற்றி, இன்று ஒரு சாதாரண கான்ஸ்டேபிளால் தகர்த்தெறியப்பட்டுவிட்டதே!

அதுவும் எப்படிப் பேசிவிட்டான்? அடிமை இல்லையாம்! அரசாங்கத்தின் பாதுகாவலன் மட்டும்தானும்! நேர்மையான உழைப்பிருக்கிறதாம்......!

அவன் திமிர் அடங்க வேண்டும். பத்து வருஷ ஆட்சியிலே கண்டு வந்த வெற்றி இன்று துவண்டு போனாலும் மீண்டும் அது நிலைத்து நிற்க வேண்டும். அவன் 'தொப்பி'யை எடுத்தாக வேண்டும்.

அதற்கு என்ன செய்வது என்பதுதான் அவருடைய அடுத்த யோசனை. 'குறுக்கு வழி'யிலேயே நீண்டு படர்ந்திருந்த அவருடைய புத்தி, எத்தனையோ விதமான முடிவுகளுக்குப் போய்விட்டு அத்துடன் திருப்தி யடையாமல் இப்படி வந்து நின்றது. இந்தச் சூழ்ச்சி மாத்திரம் பலித்துவிட்டால்......?

கண்ணாயிரம் எப்பொழுதுமே 'ஹோட்டல் டிபன்' என்றால் உயிரை விடுவான். இது சங்கரனுக்குத் தெரியும். அதன் மூலம்தான் 'பிளான்' ஆரம்பமாயிற்று. இன்று மாலை ஆறு மணிக்கெல்லாம் 'பீட்'டில் நின்றுகொண்டிருக்கும் கண்ணாயிரம் சோர்ந்து போயிருப்பான்; மாதக் கடைசியா





# கடமையும் கண்ணாயிரமும்

வாசவன்

சிரித்த முகமும் ஸிங்கார நடையுமாய் வரும் கான்ஸ்டேபிள் கண்ணாயிரம், அன்று சுரத்தில்லாமல் வீட்டிற்குள் நுழைந்தான்.

அதைக் கண்ட அவன் மனைவி பொன்னழகி, வாயில் விரலை வைத்து அவனுடைய புது மாறுதலைக் கவனித்தாள். அருவி வேகத்தைப் போல அடுக்கடுக்காகப் பேசும் அவள் ஊமையைப்போல இருந்த காட்சி, அவள் மனதிலே எண்ண அலைகளைப் பெருக்கிக் கொண்டிருந்தது.

கோட் ஸ்டாண்டில் 'தொப்பி'யை மாட்டிக் கொண்டிருந்தபொழுது அவன் திடீர் என்று சொன்னான்:

"அடிமையாம், அடிமை! என்னை யார் என்று நினைத்துக் கொண்டார்?"

அவனுடைய பேச்சிலே தொனித்த கரகரப்பையும் பரபரப்பையும் கண்டு, ஏதோ ஒரு சிக்கலான விஷயம் நடந்திருக்க வேண்டுமென்று ஊகித்தாள் பொன்னழகி.

கண்ணாயிரம் மீசையை முறுக்கிய வாறு, "நாமார்க்கும் குடியல்லோம்; நமனை யஞ்சோம்!" என்றான்.

பொன்னழகிக்குச் சிரிப்புத்தான் வந்தது. அவனுடைய தேவாரப் பற்றை ரஸித்துக் கொண்டே, "யமனை எங்கே பார்த்தீங்க?" என்று கேட்டாள்.

"வேறே எங்கே? எல்லாம் எங்க ஸ்டேஷன்லேதான்!"

"அங்கே ஏன் வந்தாரு? மதுவிலக்குச் சட்டத்தை மீறினதுக்காகக் கம்பிக்குள்ளே கிடக்கிறாரா?"

"விளையாட்டெல்லாம் இருக்கட்டும், பொன்னழகி! அவர் என்னை என்னவோ பண்ணிப்பிடுவாராமே......!"

"யாரைச் சொல்றீங்க?"

"எல்லாம் அந்த சப்-இன்ஸ்பெக்டரைத்தான் சொல்கிறேன்."

"ஏன், அவருக்கு என்ன?"

"அவருக்கென்ன? கல்லுப் பிள்ளையார் மாதிரிதான் இருக்கார். என் கிட்டேயே அவர் கை வரிசையைக் காட்டுறார். அதிகாரம் இருந்தா அவரோடே!"

"அவருக்கு அதிகாரம் இருக்கு; உங்களுக்கு மீசை இருக்கு...... விஷயத்தைச் சொல்லாமே, 'நாட் புட்'னு பேசறீங்களே!"

"இந்தா, என் மீசையைப் பத்தி மாத்திரம் பேசாதே! அவருக்கு இருக்கிற அதிகாரம் இல்லேக்கே போகலாம். என் மீசை அப்படி இல்லே; அது நிரந்தரமா என்னிடத்திலே இருக்கும். எந்த விஷயத்திலே அவர் என்னைவிடப் பெரியவர்?"

"ஒரே ஒரு விஷயத்திலே உங்களைவிட அவர் பெரியவர்தான். அதை நீங்களே ஒத்துக் கொள்ளணும். என்னன்னு கேளுங்க. மூக்காயிக் காளைப்போல மூணு குழந்தைகளுக்கு அவர் அப்பாரா யிருக்காரு. உங்களுக்குத்தான் இப்பப் புள்ளையே இல்லையே!" என்றாள் பொன்னழகி சிரித்துக் கொண்டே.

தோல்வியை மறைக்கும் பாவனையில் கண்ணாயிரம் பேசினான்:

"பொன்னழகி! என்னிக்குமே அந்த சப்-இன்ஸ்பெக்டர் என் கிட்டே வம்புக்கு வரமாட்டார். இன்னிக்குப் பாரு, 'டே, கண்ணாயிரம்'னு கூப்பிட்டார். அவர் அதிகாரத் தோரணை எனக்குப் பிடிக்காட்டாலும் மரியாதைக்காகப் போனேன். ஒரு அரிசிப் பையை என்னிடம் நீட்டி, 'வீட்டிலே கொண்டு போய்க் கொடு'ன்னு சொன்னார். 'முடியாது'ன்னேன். முறைச்சுப் பார்த்தார்......"

"பெரிய இடத்துப் பொல்லாப்பெல்லாம் எதுக்கு? ஒரு நாலு எட்டு நடந்து போயி, அரிசிப் பையை அவர் வீட்டிலே கொடுத்துட்டு வந்தா காலா தேஞ்சு போயிடும்?"

"புரியாதவளாயிருக்கியே! இன்னிக்கு அரிசிப் பையைத் தூக்கச் சொன்னார். நாளைக்கு அவர் புள்ளையைத் தூக்கி வச்சுக்கும்படி சொல்வார்!"

"எல்லாரும் போகிற வழியிலே போகாமே இப்படி எடக்குப் பண்ணினா அவருக்குக் கோவம்தானே வரும்?"

"கோவம்தானே வந்துச்சு! எண்ணெயிலே போட்ட அப்பளம் மாதிரி துள்ளிக் குதிச்சார். 'டே, பாருடா! இன்னும் ஒரு வாரத்திலே உன் தலைக்குத் தண்ணீர் ஊத்தி வீட்டுக்கு அனுப்பலேன்னா, என் பெயர் சங்கரன் இல்லையடா'ன்னார். 'அப்புறம் என்ன பேரு வச்சுக்குவீங்க, எசமான்?'னு கேட்டேன். பதில் சொல்லலே; பல்லைக் கடிச்சார். பெரிய எசமான் கிட்டே கேட்டுக்கிட்டு வீட்டுக்கு வந்துட்டேன்."

"பொழைக்கிற பொழைப்பிலேயும் மண்ணைப் போடத்தான் வழி வச்சிட்

"பாவம், விழுந்துட்டீங்க!—சரி, நான் தூக்கிக்கிறேன் சுமையை; நீங்க முன்னே நடங்க!"

"புண்ணியவான், மவராசனா இருப்பே!"

சுந்தரம் தன்னிடமிருந்த துணி மூட்டையை அவளிடம் கொடுத்து விட்டு, நெற்சுமையைத் தூக்கிக் கொண்டான். சுமை போக வேண்டிய இடத்திற்குப் போய்ச் சேர்ந்தது.

பெண் பிள்ளை அங்கே கூலி பெற்றுக் கொண்டாள். பசியினால் களைத்துக் கீழே விழுந்து விடுபவன் போல் நின்ற சுந்தரத்தை அவள் கனிவுடன் விசாரித்தாள். சுந்தரம் தன் கதையைச் சொன்னான். "அப்படின்னா, ராவு எங்க குடிசையிலே தங்கிட்டுப் போங்க!" என்றாள் அவள்.

சுந்தரம் மறுக்கவில்லை; அவள் பின்னாலேயே சென்றான்.

அவள் தன் குடிசையுள் ஒரு கயிற்றுக் கட்டிலைப் போட்டு அவனை உட்காரச் சொன்னாள். பிறகு ஒரு களி உருண்டையையும், அதற்குத் துணையாகக் கொஞ்சம் துவையலையும் ஓர் இலையில் வைத்து அவனிடம் கொடுத்தாள். சுந்தரம் நன்றியுடன் அதைச் சாப்பிட ஆரம்பித்தான்.

அவள் தன் வீட்டிலிருந்த இரு பேர்களைச் சுந்தரத்திற்கு அறிமுகப் படுத்த எண்ணி, "இவர்தான் என் புருசரு!" என்றாள் வெட்கத்துடன்.

அவள் கணவன் கீற்றுப் பாயின்மேல் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான்.

"இவருக்கு மூணு நாளா காய்ச்சலுங்க. வரப்புக்குப் போக முடியல்லே. நெருப்புக் கணக்கா உடம்பு கொதிக்குது. சும்மா நான் குந்திக்கிட்டிருந்தா அடுப்பு எரியுமாங்க? இதோ கிடக்கிறானே புள்ளே. இவனைப் பார்த்துக்கிடச் சொல்லி விட்டு நான் அறுவடைக்குப் போனேனுங்க. அவரு என்னமோ நான் இருக்கிற நிலையிலே போக வேண்டாமின்னு தான் சொன்னாரு......!"

சுந்தரம் அவளை ஏற இறங்கப் பார்த்தான். வாயில் இனித்த களி உருண்டையைக்கூட அவன் விழுங்கவில்லை; அதற்குள் அவனுடைய நெஞ்சிலிருந்து குமுறி எழுந்த உணர்ச்சி தொண்டையை அடைத்து விட்டது. அவன் தன்னையும் அவளையும் ஒப்பிட்டுப் பார்த்தான். தான் ஆண்பிள்ளை; அவளோ பெண்பிள்ளை. இருந்தாலும் அவளுக்குத் தன்னம்பிக்கை இருக்கிறது; தனக்கு......?

"என்னங்க, களி ரொம்பக் குளிர்ந்து போயிருக்கா? நான் வீட்டிலிருந்தால் சுடு சோறு ஆக்கிப் போடுவேனுங்க. இல்லாததாலே......!"

சுந்தரம் விரைவு கலந்து அவசர அவசரமாகச் சாப்பிட்டான்; அவளுக்கு நன்றி கூறினான். தன் துணி மூட்டையையும் கூட மறந்துவிட்டுப் புறப்பட்டான். எங்கே? எதற்கு?

தன் அன்பு மனைவி சொக்கியுடன் சேர்ந்து உழைத்து வாழ்வதற்குத்தான்

## * பாருக்குள்ளே நல்ல நாடு *

"தீரத்திலே படை வீரத்திலே நெஞ்சில் ஈரத்திலே உபகாரத்திலே" தலைசிறந்த நாடு பாருக்குள்ளே நல்ல நாடு என்பதில் ஐயம் என்ன? அத்தகைய நம் தாய்த் திருநாட்டைக் குறித்து மகாகவி பாரதியார் பல அருமையான கீதங்களைப் பாடியிருக்கிறார். இந்தியா தேசம் குடியரசு பெற்ற சரித்திரப் பிரசித்தமான சுபதினத்தில் "பாருக்குள்ளே நல்ல நாடு" என்னும் பாடல் இசைத் தட்டில் பதிவாகி வெளியாகியிருக்கிறது. ஜனவரி 26ல். பொன்னொளிர் பாரத நாடு பூரண சுதந்திரம் பெற்ற வைபவத்துக்கு வானுலகிலிருந்து கந்தர்வ வித்யாதரர்கள் விஜயம் செய்து தேவகானம் செய்திருப்பார்கள் என்று எதிர்பார்க்கலாம் அல்லவா? அன்று நம்முடைய குதூகலத்திலும் குண்டு முழக்கத்திலும் வாண வேடிக்கைகளிலும் கந்தர்வர்களின் கானத்தை நாம் கவனிக்கத் தவறியிருப்போம். ஆனால் பூலோகத்திலும் ஒரு கந்தர்வர் பாரதி கீதத்தை இசைத் தட்டில் பாடி நாம் சாவகாசமாகக் கேட்க வசதி செய்து கொடுத்திருக்கிறார். நம் கந்தர்வரான ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதரைத்தான் குறிப்பிடுகிறோம். கானத்திலே இனிதாக நிறைந்த பாரதியார் கவிதையைப் பாகவதர் ஒரு பக்கத்தில் இனிமை ததும்பப் பாடிவிட்டு, மற்றொரு பக்கத்தில் ஸ்ரீ உமைதாணுப் பிள்ளையின் சாஹித்யமான "சுதந்திரக்கொடி"ப் பாடலைக் கம்பீரமான வாத்திய கோஷங்களுடன் ஜாம் ஜாம் என்று பாடியிருக்கிறார். நம்முடைய தேசிய சுதந்திரக் குடியரசுக் கொடியின் உட்பொருள் முழுதும் இந்தப் பாடலில் நன்றாக உணர்த்தப் பட்டிருக்கிறது. கொலம்பியா வெளியீடு. இசைத் தட்டு நெம்பர் G. E. 6711. விற்பனை உரிமை: ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், சென்னை.

சரி, இன்னும் கொஞ்ச நாள் தொடர்ந்து அவன் கஷ்டப்படட்டும். பிறகு தாயார் வீட்டிற்குப் போய்ச் சேரட்டும்......

சுந்தரத்தின் எண்ணங்கள் மட்டுமன்றி, கால்களும் தடைப்பட்டன. சோகம் தன்னை வெறுக்கவில்லை. பின் ஏன் நாம் ஓடிப் போக வேண்டும்?

இக்கேள்வி அவனைத் தடை செய்து நிறுத்தியது. 'திரும்பிப் போய்விடலாமா?' என்று நினைத்தான். ஊரின் எல்லையைத் தாண்டி வந்தாயிற்று. திரும்பிப் போனால்......அதே தரித்திரம், அதே வறுமை... !

மறுபடியும் பழைய வைராக்கியம் தலை தூக்கியது. ஒன்று, பணம் சம்பாதித்துக் கொண்டு வீடு திரும்புவது; அம்முயற்சியில் தோல்வி கிடைத்தால் சந்நியாசியாக மாறிவிடுவது—இதுவே சுந்தரத்தின் தீர்மானம்.

சுந்தரம் மறுபடியும் நடக்கலானான்.

★

சூரியன் மேற்கு வானில் மறைந்து கொண்டிருந்தான். சுந்தரம் உணர்ச்சிக் கடலில் மிதந்து கொண்டிருந்தான். அவன் உட்கார்ந்திருந்த ஆற்றங்கரையில் சிறு அலைகள் சலசலத்துக் கொண்டிருந்தன. அவன் உள்ளத்திலும் எத்தனை எத்தனை அலைகள்.........?

விடியற்காலை முதல் நடந்து, நடந்து களைத்துப் போனான் சுந்தரம். பசி காதை அடைத்தது. 'இதென்ன வாழ்க்கை!' என்று வெறுத்துக் கொண்டான். இந்தச் சமயத்தில் கலகலவென்று பலர் பேசிக் கொண்டு வந்த சத்தம் அவன் கவனத்தைக் கவர்ந்தது.

ஆற்றங்கரை யோரமாக ஒற்றையடிப்பாதை. அந்தப் பாதையில் குடியானவர்கள் ஆண்களும் பெண்களுமாக நெற்சுமைகளைச் சுமந்து ஓட்டமும் நடையுமாக ஊரை நோக்கி வந்து கொண்டிருந்தனர். மாலை வெய்யிலில் அவர்கள் அழகிய விமற் சித்திரங்களைப் போல் காணப்பட்டார்கள். இக்காட்சி சுந்தரத்தின் சிந்தனையைத் தாண்டியது.

இவர்களெல்லாம் காலையில் கழனிக்குப் போய், நடும்பகல் வரை உழைத்து, இடையில் கொஞ்சம் கஞ்சி குடித்து, மறுபடியும் மாலைவரை உழைத்துவிட்டு வருகிறார்கள். ஆண்கள் மட்டுமல்ல உழைப்பது; பெண்களும் தங்கள் குழந்தை குட்டிகளோடு சென்று உழைத்து விட்டு வருகிறார்கள்!

இவர்கள் தன்னைப்போல் வறுமையைக் கண்டு வெருண்டு ஓடவில்லை; எதிர்த்துப் போராடுகிறார்கள்!

இந்தச் சமயத்தில் "ஐயோ!" என்னும் அலறல் கூப்பிடு தூரத்திலிருந்து கேட்டது. சுந்தரம் சத்தம் வந்த திசையை நோக்கி ஓடினான்.

அங்கே ஒரு பெண்மணி கீழே விழுந்து கிடந்தாள். அவளுக்குப் பக்கத்தில் அரிவாள் செருகிய நெற்கமை ஒன்று இருந்தது. அவள் முனகிக் கொண்டிருந்தாள்.

மங்கிய ஒளியில் அவளைக் கூர்ந்து கவனித்தான் சுந்தரம். அவள் கர்ப்பிணி; எழெட்டு மாதமிருக்கலாம். தாங்கமாட்டாத சுமையைத் தாங்கி வந்தவள் கல் தடுக்கிக் கீழே விழுந்து விட்டிருந்தாள்.

"காயம் ஏதாவது பட்டதா, அம்மா?"

"இல்லிங்க; கூட வந்தவங்களெல்லாம் முன்னாடி போயிட்டாங்க! அவங்களைப் பிடிக்கணுமேன்னு ஓடினேன்......"



# ஓடிப்போனவன்

**பாலகுரு**

நள்ளிரவு. மெல்லக் கண்ணைத் திறந்து பார்த்தான் சுந்தரம். சொக்கி சுருண்டு கிடந்தாள். ஏதோ தீர்மானத்திற்கு வந்தவனாய் அவன் 'விசுக்'கென்று எழுந்தான். 'சிம்னி' விளக்கைப் பெரிதாக்கினான். வத்தி மேலுக்கு ஏறவில்லை. குபீரென்று பெரிதாகி ஜ்வாலை அணைந்துவிட்டது. 'தரித்திரம் தாண்டவம் ஆடுகிறது!' என்று அவன் முணுமுணுத்தான். வத்தி முனையில் சிவப்பாகச் சிட்டம் கட்டி நின்ற நெருப்புப் பொறியிலிருந்து கரி பிடித்த மூளி 'சிம்னி' வழியாகச் சிரமப்பட்டு வெளியே வந்த வெளிச்சம், சுந்தரத்தின் அசடு வழியும் முகத்தை அதி கோரமாகக் காட்டியது.

சிறிது நேரம் அந்த நெருப்புப் பொறியையே உற்றுப் பார்த்தான் சுந்தரம். அவனது வெறித்த பார்வையின் தீக்ஷண்யத்தைத் தாளாமலோ என்னவோ, அந்த நெருப்புப் பொறியும் அணைந்து, கரியாக மாறிப் புகைய ஆரம்பித்தது. சுந்தரத்தின் மனதிலிருந்து துருத்திக் கொண்டு வந்த நீண்ட மூச்சு மூக்கில் நுழைந்த புகையை விரட்டியது.

மறுபடியும் மின்சாரம் தாக்கியவன் போல் சுந்தரம் அவ்விடத்தை விட்டு நகர்ந்து, இருட்டில் எதையோ துழாவினான். அவன் துழாவிய வஸ்து கையில் சிக்கியது. அதை எடுத்துக் கொண்டு கதவைத் திறந்தான். நிலவு வெளிச்சம் உள்ளே வீசியது. சொக்கி தூங்கிக் கொண்டிருந்தாள். ஆம், கவலையை மறந்து, பசியை மறந்து, ஏன்—தன்னையே மறந்து அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். சுந்தரம் வாசற்படியிலேயே நின்று அவளைப் பார்த்தான்; பரிதாபகரமாகப் பார்த்தான்; கனிவோடு பார்த்தான்; குமுறிய உள்ளத்தோடு கண்களை இமைக்காமல் அவளை விழுங்கி விடுபவன் போல் பார்த்துக் கொண்டே நின்றான்.

அந்தச் சமயம் மேகம் நிலவை மறைத்தது. அறையில் இருள் பரவியது. சொக்கியின் உருவம் இருட்டில் மறைந்து மங்கலாகக் காணப்பட்டது. சுந்தரத்தின் கண்களில் அரும்பிய நீர்த் துளிகள் கீழே உதிர்ந்தன. கதவைச் சாத்திவிட்டு, கையில் எடுத்துக் கொண்ட மூட்டையை மூலையில் போட்டுவிட்டுச் சுந்தரம் சொக்கியின் பக்கம் கண்களைத் திருப்பினான். ஓட்டைக் கூரையிலிருந்து உள்ளே வந்த சந்திர ஒளி அவள் முகத்தில் பட்டது. அவள் கனவில் சிரித்துக் கொண்டிருந்தாள்.

சுந்தரம் சொக்கியின் முகத்தை அன்போடு வருடிவிட்டு, மூட்டையை எடுத்துக்கொண்டு, வேகமாக வெளியே நடக்கலானான்.

★

பொழுது விடியும் சமயம். நிலவொளி தேய்ந்து கொண்டிருந்தது. சந்திரன் தூசி பட்ட வெள்ளித் தகடு போல் மங்கிக் கொண்டிருந்தான். நக்ஷத்திரங்கள் மட்டும் வாரி இறைத்த வைரங்களைப்போல ஒளி வீசிக் கொண்டிருந்தன. சுந்தரம் நடந்து கொண்டே இருந்தான்.

வேறு எதிலும் அவனுடைய யோசனை செல்லவில்லை; அவன் யோசனையெல்லாம் அவ்வீட்டை விட்டு, அவ்வூரை விட்டு, முடிந்தால் அதன் சுற்றுப் புறத்தையே விட்டு, ஓடிப்போகும் வழியில்தான் சென்றது.

சொக்கி!—அவள் இப்பொழுது என்ன செய்து கொண்டிருப்பாள்? தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருப்பாளா? அல்லது விழித்துக் கொண்டு தன் கணவனைக் காணவில்லையே என்று பதறித் துடித்துக் கொண்டிருப்பாளா? இப்பொழுதில்லா விட்டாலும் இன்னும் கொஞ்ச நேரம் பொறுத்ததும்......?

பாவம், தேடித் தேடி அலையப் போகிறாள்; செய்வது தெரியாமல் வாடப் போகிறாள்; குமுறிக் குமுறி அழப் போகிறாள்.

அழட்டும்!

அழுகை; என்னைக் கலியாணம் செய்து கொண்டது முதல் அழுகை; ஓயாத தரித்திரத்தின் அழுகை!

நிஜமாக அவள் அழுதாளா?—இல்லையே! அவள் ஒருநாளும் அழுததில்லையே! தொடர்ந்தாற்போல் மூன்று நாட்கள் பட்டினி இருக்க நேரிட்டபோது கூட அவள் அழவில்லையே! பின்னே, நான் ஏன் அவள் அழுதாள் என்று நினைத்துக் கொள்ள வேண்டும்?—சீச்சீ! வெளியே சிரித்தபடி இருந்தாலும் அவள் மனசு ஏழைக்கு வாழ்க்கைப் பட்டதை நினைந்து உள்ளூற அழாமலா இருக்கும்?






















ஆம்! 'கண்ணன்' தான் அத்தனை பேரையும் இழுத்து வைத்துக் கொண்டது. அம்மாவுக்கு ஏன் ஆச்சரியமாக இருக்காது

**கண்ணன்** தனிப் பிரதி அணா 4

குழந்தைகளின் பத்திரிகை வருஷ சந்தா ரூ. 3

**கண்ணன் - தபால் பெட்டி 604 - சென்னை - 4**

சில நாட்களுக்கெல்லாம் நிர்மலாவின் தந்தையிடமிருந்து கடிதம் வந்தது. நடராஜ னின் ஜாதகம் தம் பெண் ஜாதகத்துடன் பொருந்தி யிருப்பதாகவும், முகூர்த்த தினத் தைக் குறிப்பிட்டும் கடிதம் எழுதியிருந்தார். ஒரு சுப முகூர்த்தத்தில் நடராஜனுக்கும் நிர்மலாவுக்கும் விமரிசையாகக் கல்யாணம் நடந்தது. நடராஜனின் தமையன் வெங்கட ராமன் அஸ்ஸாமிலிருந்து விசேஷ லீவில் வந்திருந்து முகூர்த்தத்தை நடத்தி வைத் தார். தமையனார் கல்யாணப் பரிசாக, நடராஜனுக்கும் நிர்மலாவுக்கும் தந்தத் தினால் செய்த அழகிய வைர மோதிரங்களைப் பரிசளித்தார். அந்த மோதிரங்கள் இரண்டும் தம்பதிகள் இருவருடைய அளவுக்கும் மிக வும் பொருத்தமாயிருந்தது எல்லோருக்கும் வியப்பை அளித்தது. "நாலு மாதமாக இந்த மோதிரங்களை உங்களுக்கு அளிக்க வேண்டுமென் றிருந்தேன். இப்பொழுது தான் அந்தப் பாக்கியம் கிடைத்தது" என்றார் வெங்கடராமன் பரிசைக் கொடுக்கும்போது.

நடராஜனுக்கு ஒன்றும் புரியவில்லை. "நாலு மாதமாகவா ......!" என்று அவன் வாயைப் பிளந்தான்.

"ஆமாம்; நாலு மாதமாகத்தான்!" என் றார் வெங்கடராமன் சிரித்துக் கொண்டே.

"எனக்குக் கல்யாணம் நிச்சயமானதே ஒரு மாதத்துக்கு முன்புதானே?"

"உனக்குக் கல்யாணம் நிச்சயமானது ஒரு மாதத்துக்கு முன்புதான். ஆனால் மோதி ரம் செய்வது நாலு மாதத்துக்கு முன்பே நிச்சயமாகி விட்டது......!"

"அது எப்படி முடியும்? என் விரலின் அளவுதான் ஏற்கெனவே உங்களுக்குத் தெரியும். ஆனால் நிர்மலாவின் அளவுக்குக் கூடச் சரியாக இருக்கும்படி ஏற்கெனவே நீங்கள் மோதிரத்தைச் செய்து வைத்தது ஆச்சரியமாயிருக்கிறதே!"

"ஆச்சரியம் ஒன்றுமில்லை" என்று கூறி வெங்கடராமன் ஒரு கடிதத்தைத் தம்பி யிடம் கொடுத்தார். அது, டில்லியி லிருந்து அப்பாவுக்குச் சில வாரங்களுக்கு முன் தாமு எழுதிய கடிதம். நடராஜன் பின்வருமாறு அந்தக் கடிதத்தில் எழுதி யிருந்ததைப் படித்தான்:

"அப்பாவுக்குத் தாமு அநேக நமஸ்காரம். உபயக்ஷேமம். என் வகுப்புத் தோழியும் ஆருயிர் சிநேகிதியுமான நிர்மலாவின் கல்யா ணம் நிச்சயமாகி விட்டதென்பதை மகிழ்ச்சி யுடன் தெரிவித்துக் கொள்கிறேன். வெகு காலமாகவே நிர்மலாவின் சாந்த சுபாவத்தை யும் நல்ல குணத்தையும் பார்க்கும்போதெல் லாம் சித்தப்பாவைப் பற்றி என்னால் நினைக் காமலிருக்க முடியவில்லை. இதைப்பற்றி நான் உங்களிடம் சொன்ன போதெல்லாம், 'என் தம்பியின் பிரும்மசரிய விரதத்தை யாருமே கலைக்க முடியாது' என்று சொன் னீர்கள். நான் யோசித்துப் பார்த்ததில், சித்தப்பாவின் விரதத்துக்குக் காரணம் பாட்டிதான் என்று தெரிந்து கொண்டேன். 'அம்மா கட்டுப் பெட்டி, நாகரிகமான நாட்டுப் பெண்களைக் கண்டால் அவருக்குப் பிடிக்காது' என்பது சித்தப்பாவின் எண் ணம். இந்தக் காலத்தில் அம்மாவின் இஷ் டப்படி இருக்கக்கூடிய பெண்களே கிடைக்க மாட்டார்கள் என்றுதான் அவர் கல்யாணமே வேண்டாம் என்று சொல் லிக் கொண்டிருந்தார் என்பதை அறிந்து கொண்டேன். ஆகவே என் கல்யாணத்துக் கான விளம்பரம் பத்திரிகையில் வந்ததும், உடனே நிர்மலாவை வரச் சொல்லி முன் கூட்டியே கடிதம் எழுதினேன். அவள் என்னுடைய வேண்டுகோளை நிராகரிக்க வில்லை; நேரே இங்கு வந்து சேர்ந்தாள். கர்நாடகப் பெண் மாதிரியே அவளை நடிக் கும்படி சொன்னேன். அவளும் அழகாக நடித்து, பாட்டியின் மனதைக் கவர்ந்து விட்டாள். ஆனால் என் திட்டத்தை அவள் ஒப்புக் கொள்ளும்படி செய்வதற் குள் என் உயிரே போய்விட்டது. அவள் என்னைவிட நாகரிகக்காரி என்பதும், அவளுக்குச் சகோதரனே இல்லை யென் பதும் தெரிந்தால் பாட்டிக்கும் சித்தப்பா வுக்கும் எவ்வளவு ஆச்சரியமாக இருக்கும்? என் கல்யாணத்தை நடத்தி வைப்பதற்கு என்னைப் பட்டணத்தில் கொண்டு வந்து விட்டிருப்பதாகச் சித்தப்பா நினைத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் அவர் கல்யா ணத்தை நடத்தி வைப்பதற்காகவே நான் சென்னைக்கு வந்திருக்கிறேன் என்பது அவருக்குத் தெரியவில்லை. ஆகவே, முன் கூட்டியே நிர்மலாவின் விரல் அளவுக்குச் சரியாக நாம் இன்னொரு தந்த மோதிரம் செய்து வைத்திருப்பது இன்றுவரை அவ ருக்குத் தெரியாது என்பதைச் சந்தோஷத் துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தாமு."

இந்த விஷயம் தெரிந்ததும் பாட்டி என்ன சொல்லப் போகிறாளோ என்று எல்லோரும் அவளுடைய முகத்தைப் பார்த்தார்கள். "நிர்மலா எப்படி இருந்தால் என்ன? அவள் குணம் தங்கம்!" என்றான் தாமு.

"ஆமாம், உன்னை எனக்கு ரொம்பப் பிடித்துவிட்டது. உன் மாதிரி நாட்டுப் பெண் கிடைக்கவேண்டுமென்றுதான் இத்தனை நாள் காத்திருந்தேன். நடராஜனை உன் மனசுக்குப் பிடித்திருந்தால் கல்யாணத்தை நடத்திவிடலாம். அவசரமில்லை; மெதுவாக யோசித்து ஊருக்குப் போய் எழுதினால் போதுமானது" என்று கூறிய நாமு, "நடராஜா, இங்கே வா! உன்னை இந்தப் பெண் நன்றாக இன்னொரு தடவை பார்க்கட்டும்" என்று கூப்பிட்டாள். நிர்மலா சங்கோஜத்துடன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருந்தாள். 'தாய் சொல் துறந்தால் வாசகமில்லை' என்ற மூதுரைப்படி நடராஜனும் ஹாலில் வந்து சங்கோஜத்துடன் அவர்கள் எதிரில் நின்றான். அவனைக் கண்டதும் நிர்மலா சட்டென்று எழுந்துவிட்டாள்.

"பாட்டி, இவர்கள் குடும்ப சம்பிரதாயம் எப்படி, தெரியுமா? பெண் பையனைப் பார்க்கக்கூடாது. பெரியவர்கள் வந்து பார்த்துத்தான் நிச்சயிக்க வேண்டும். இவர்கள் சம்பிரதாயத்தை ஏன் கெடுக்கிறாய்?" என்றான் குறும்புச் சிரிப்புடன் நாமு. இத்துடன் அவன் விடவில்லை. நிர்மலாவைப் பார்த்து, "நீங்கள் தனியாக ஊரிலிருந்து ரயிலில் வந்திருக்கிறீர்களே, ஸ்திரீகள் தனியாக வரலாமா?" என்றான். இந்தக் கேள்வி நடராஜனுக்குக் கூட ஆத்திரத்தை உண்டாக்கியது. அவன் நிர்மலாவுக்குக் கோபமூட்டிக் காரியத்தைக் கெடுத்துவிடப் போகிறானே என்று அவனுக்குப் பயம். "நான் தனியாக ஒன்றும் சென்னைக்கு வரவில்லை. என் தகப்பனாரின் சிநேகிதர் குடும்பம் சென்னைக்கு வந்தது. நானும் அவர்களுடன்தான் வந்தேன்" என்றாள் நிர்மலா. "ஆமாம்; ஸ்திரீகள் புருஷர்களிடம் நேரில் பேசுவது சம்பிரதாயத்துக்கு விரோதமில்லையா?" என்றான் நாமு. நடராஜன் எரித்து விடுகிறவன் மாதிரி நாமுவைப் பார்த்தான்.

அன்று இரவு ரயிலுக்குப் போகும்வரை நிர்மலா அந்த வீட்டிலேயேதான் தங்கினாள். சம்பிரதாயத்துக்கு விரோதமாக நிர்மலா நடராஜனைக் கடைக் கண்ணால் பல தடவை பார்த்தாள். எப்படியானாலும் என்ன? நாமு அம்மாளுக்கு நிர்மலாவை மிகவும் பிடித்துவிட்டது. நடராஜனும் நாமுவும் அன்றிரவு நிர்மலாவை ரயிலில் ஏற்றி விட்டுத் திரும்பினார்கள். 'அருமை அம்மாவின் சொற்படியே' நிர்மலாவைக் கல்யாணம் செய்துகொள்ளச் சம்மதித்தான் நடராஜன்.

## ★ தண்டனை ★

அன்று ஞாயிற்றுக்கிழமை. சோமு காப்பி கோட்டுப் புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டான். ஆனால் அந்தக் காப்பியில் அவன் மனம் செல்லவே இல்லை; சமையலறைக் காப்பியையே மனம் நாடிற்று. உள்ளேபோய் அம்மாவிடம் சண்டை பிடித்துக் காப்பி வாங்கிக் குடித்தான் சோமு. அப்புறம் வந்து உட்கார்ந்து மறுபடியும் எழுத ஆரம்பித்தான். ஊஹூம்; அவனுக்கு எழுத ஓடவேயில்லை. 'ராஜா சினிமா'வில் கிரேட்டா கார்போ நடித்த படம் ஓடிக்கொண்டிருந்தது. கிரேட்டா கார்போ என்றால் சோமுவுக்கு உயிர். எப்படியாவது இன்று மூன்று மணிக் காட்சிக்குச் சினிமாவுக்குப் போய் விடுவது என்று சோமு தீர்மானித்தான். ஊரிலிருந்து அத்தான் வந்தபோது கொடுத்த அரை ரூபாய் அவனிடம் பத்திரமாயிருந்தது. அதை எடுத்துக்கொண்டு ஓசைப்படாமல் அவன் வெளியே வந்தான். அந்தச் சமயம் உள்ளேயிருந்து அவன் மாமா, "எங்கேடா, வெய்யிலில் வெளியே போகிறாய்?" என்று அதட்டினர்.

"ஒரு பையன் வீட்டுக்குக் கணக்குப் போடப் போகிறேன்" என்று ஒரு போடு போட்டான் சோமு. மாமா பேசாமல் இருந்துவிட்டார்.

சோமு டிக்கெட் வாங்கிக்கொண்டு சினிமாவுக்குள் நுழைந்தான். அன்றைக்கு அவன் பார்த்த படம் முழு மோசம். படத்தில் நடிப்பவள் கிரேட்டா கார்போதானா என்று சோமுவுக்கு சந்தேகம் வந்துவிட்டது.

படம் முடிந்ததும் மன வருத்தத்துடன் வீட்டுக்குப் போனான் சோமு. மாமா 'டிரஸ்' பண்ணிக்கொண்டு வாசலில் நின்று கொண்டிருந்தார்.

"எத்தனை கணக்குப் போட்டாய்?" என்று கேட்டு, அதற்குப் பதிலை எதிர் பார்க்காமலே, "சரி, வாடா போகலாம்!" என்றார் மாமா.

"எங்கே மாமா?" என்று கேட்டான் சோமு.

"சினிமா, சினிமா என்று மூன்று நாளாகப் பிராணனை வாங்கினாயே! சினிமாவுக்குப் போகலாம் வா!" என்று கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு நடந்தார் மாமா. நேரே, அவர் 'ராஜா சினிமா'வுக்குள்ளே நுழைந்தார். சோமுவின் முகம் பரிதாபமாயிருந்தது. — "ஜோமன்"

போல் கேட்டாள் நிர்மலா. "ஆமாம், பிரசித்தி பெற்ற நட்டுவனார் உளையூர் உத்தமராயப் பிள்ளையிடம் மூன்று வருஷம் நாட்டியம் சொல்லிக் கொண்டேன். என் நாட்டிய அரங்கேற்ற விழாவுக்குக் கவர்னரே தலைமை வகித்தார்!" என்றாள் காமு.

"பாட்டி! என்னை மன்னிக்கணும். நாங்கள் கொஞ்சம் கர்நாடகமான பேர் வழிகள். நீங்கள் போட்டிருந்த விளம்பரத்திலிருந்து ஏமாந்து போய் நீங்களும் எங்களைப் போல் இருப்பீர்கள் என்று நினைத்து இங்கே வந்தேன். எங்கள் குடும்பத்திலே பெண் பார்க்கிறதாயிருந்தால் கூட, பிள்ளை வந்து பார்க்கிறதில்லை. சம்பிரதாயப்படி பிள்ளை வீட்டு மனுஷாள்தான் வந்து பார்ப்பார்கள். காதல் கீதல் ஒன்றும் எங்களுக்குப் பிடிக்காது. அதனால்தான் நானே பெண்ணைப் பார்க்க வந்தேன். உங்கள் வீட்டுப் பெண்ணுக்குப் பரதநாட்டியம் தெரியும் என்கிறதைக் கேட்டவுடனே எனக்கு என்ன சொல்கிறது என்றே தெரியவில்லை. உங்களுடைய நாகரிகக் குடும்பத்துக்கும் பழைய சம்பிரதாயத்திலே வளர்ந்த எங்கள் கர்நாடகக் குடும்பத்துக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருக்கு. எங்கள் வீட்டுக்கு வருகிற பெண் அதிகமாகப் பேசக்கூடாது. 'கொசவம்' வைத்துக் கட்டிக் கொள்ளணும். சினிமாவுக்குப் போகக் கூடாது. கோவிலுக்குப் போகணும், மடியாக இருக்கணும். நன்றாகச் சமைக்கத் தெரியணும், தெரிஞ்சதா ......?" என்று நிர்மலா அடுக்கிக்கொண்டே வரும்போது தர்மு அம்மாள், "பலே பேஷ்!" என்று கூறி அந்தப் பெண்ணைத் தட்டிக் கொடுத்தாள். "ஓஹோ, அப்படியா?" என்றாள் காமு.

"ஆமாம், உங்கள் அப்பாவுக்கு என்ன வேலை?" என்றாள் தர்மு.

"இந்துஸ்தான் விமானக் கம்பெனியிலே சூபரின்டென்ட். ஆனால் இதை யெல்லாம் கேட்டு என்ன பிரயோஜனம், பாட்டி? உங்கள் குடும்பத்துக்கும் எங்களுக்கும் சரிப்பட்டு வராது. கல்யாணப் பேச்சு பேச வேண்டிய அவசியமே இல்லையே!" என்றாள் நிர்மலா.

"ஆமாம், பேச வேண்டிய அவசியமில்லைதான். ஆனால் கல்யாணத்தையே நடத்தி விட வேண்டியதுதான்!"

"என்ன பாட்டி, கல்யாணத்தையா!" என்றாள் நிர்மலா வியப்புடன்.

இருபது வயதிருக்கும். நல்ல களையான முகம். அவளது உதட்டின் கோவைப் பழச் சிவப்பைத் தோற்கடிக்கப் போட்டி விட்டது உடலின் சிவப்பு. அவள் அகன்ற விழிகளின் கரிய நிறத்தைத் தோற்கடிக்கப் போட்டி விட்டது கூந்தலின் கறுப்பு. அவள் எளிய தூய ஆடை உடுத்தி யிருந்தாள். அந்தப் பெண் சங்கோசத்துடன் சற்றுத் தயங்கியவாறே, "வீட்டில் பெரியவர்கள் யாரும் இல்லையா?" என்று கேட்டாள். "அம்மா இதோ இருக்கிறாள்" என்று கூறி, ஹாலில் ஒரு ஓரம் சாய்ந்து கொண்டிருந்த தர்மு அம்மாளிடம் அழைத்துக் கொண்டு போனான். தர்முவைப் பார்த்த நிர்மலா, "நமஸ்காரம், பாட்டி! உங்கள் வீட்டுப் பெண்ணைப் பார்க்க வந்திருக்கிறேன். என் அண்ணாவுக்கு லீவு கிடைக்கவில்லை. அதனால் என்னைப் பார்த்துவிட்டு வரச் சொன்னான். நான் பார்த்து என் மனதுக்குப் பிடித்து விட்டால் என்னுடைய அண்ணாவுக்கும் பிடித்தாற் போல்தான்!" என்றாள் நிர்மலா.

"உட்காரு, குழந்தை!" என்று உபசரித்தாள் பாட்டி. ஆனால் நடராஜன் அருகில் இருந்ததால் அந்தப் பெண் உட்காரத் தயங்குவதாகத் தோன்றியது. நடராஜன் ஸ்நானத்துக்காக அப்பால் போன பிறகுதான் நிர்மலா உட்கார்ந்து கொண்டாள். அலங்காரங்களை அவசரமாக முடித்துக்கொண்டு மேற்படி சம்பாஷணையைக் கேட்ட வண்ணம் கூடத்துக்கு வந்தாள் காமு.

"ஆமாம், உங்களுக்கு என்னைப் பார்த்தால் அவருக்குத் திருப்தியாக இருக்கலாம். ஆனால் நான் அவரை நேரில் பார்த்தால்தானே எனக்குத் திருப்தியாக இருக்கும்?" என்றாள் காமு சிரித்துக் கொண்டே. அவள் இப்படிப் பளிச்சென்று சொன்ன தவறை மறைப்பதற்காக நடராஜன் சிரித்துக் கொண்டே, "இந்தக் காலத்திலே பிள்ளையும் பெண்ணும் சந்தித்துப் பேசுவது வழக்கமாகப் போய்விட்டதல்லவா?" என்றான் ஜன்னலுக்கு அப்பாலிருந்து.



"காமு, போய் இவளுக்குக் காப்பி கொண்டு வந்து கொடு!" என்றாள் தர்மு அம்மாள்.

காமு சட்டென்று திரும்பி, "லச்சு, லச்சு!" என்று கூப்பிட்டாள். லச்சு என்னும் லக்ஷ்மணன்தான் அந்த வீட்டுச் சமையற்காரன். நடராஜனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. காமுவே காப்பியைக் கொண்டு வந்து கொடுப்பதுதான் மரியாதை. ஆனால் அவள் லக்ஷ்மணனைக் கூப்பிட்டுக் காப்பியைக் கொண்டு வரச் சொல்கிறாளே என்று அவன் முக்கிக்கொண்டு, "லச்சு! காப்பியை ஆற்றித் தயாராக வை; காமு அங்கே வந்து எடுத்துக் கொண்டு வருவாள்" என்று கத்தினான் அவன். ஆனால் காமுவோ, "டேய், லச்சு! காப்பியை ஆற்றாமல் இங்கே கொண்டு வா! சில்லிட்டுப் போய்விடப் போகிறது!" என்று கட்டளை விட்டாள். நிர்மலாவுக்குக் காமுவின் அதிகாரமும் ஆடம்பரமும் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை என்பது அவள் முகத்திலிருந்தே நன்றாகத் தெரிந்தது.

இருந்தாலும் நிர்மலா புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, "காமு, நீ எந்த வகுப்பு வரை படித்திருக்கிறாய்?" என்று கேட்டாள். "நான் பி. ஏ. வரை படித்திருக்கிறேன். நீங்கள் எதுவரை படித்திருக்கிறீர்கள்?" என்றாள் காமு பதிலுக்கு. நாத்தனாராக வரப் போகும் பெண்ணைப் பதிலுக்குப் பதில் கேட்பது மரியாதைக் குறைவு என்பது அவளுக்குத் தெரியவில்லை. "எனக்கு வீணை, வாய்ப்பாட்டு எல்லாம் தெரியும். உனக்குப் பாடத் தெரியுமா?" என்று கேட்டாள் நிர்மலா. "எனக்கும் பாடத் தெரியும், பரதநாட்டியம்கூட ஆடத் தெரியும்" என்றாள் காமு உற்சாகத்துடன். "என்ன, பரத நாட்டியமா!" என்று நெருப்பை மிதித்தவன்

தில்லை. எனக்கு என்ன தெரியும்?" என்று பாட்டி சமாதானம் செய்து கொண்டாள்.

சட்டென்று கீழே குனிந்த காமுவின் பின்னல் நாமு அம்மாளின் கவனத்தைக் கவர்ந்தது. தூக்கி வாரிப்போட்டது அவளுக்கு. "காமு! இதென்ன மயிர் இப்படிக் கொட்டிப் போய்விட்டதே! கட்டுக்கடங்காமல் எப்படியிருந்த தலை மயிர் கொத்தவரக்காய் வற்றல் மாதிரி ஆகிவிட்டதே!" என்று வருந்தினாள். டோராஜன் குறுக்கிட்டு, "அம்மா! காமு பின்னலில் இன்னொரு பாதி வலது தோள் பட்டையில் தொங்கிக் கொண்டிருக்கு; இரட்டைப் பின்னல் போட்டுக் கொண்டிருக்கிறாள். வேறொன்றுமில்லை!" என்று விளக்கிக் கூறினான்.

"இதென்னடா அதிசயம்! இரட்டைப் பின்னலா? நன்றாயிருக்கு. நாம் என்ன வெள்ளைக்காரர்களா, இப்படியெல்லாம் வேஷம் போட்டுக்கொள்ள?" என்று கூறி அதிசயித்தாள். நாமு அம்மாள் வெளியில் எங்கும் செல்வதில்லையாகையால் இரட்டைப் பின்னல் சில காலமாக அமுலில் இருப்பது அவளுக்குத் தெரியாது.

காமு வந்த அன்றே வீட்டில் ஒரே சிரிப்பும் ஆர்ப்பாட்டமும். ஒருதரம் வென்று ஒரு நிமிஷம்கூடச் சும்மா இருக்க மாட்டாள் காமு. எப்போதும் ஏதாவது பேச்சு, பாட்டு, கூத்துத்தான். ஆனால் காமுவை அவன் கண்டிக்க இஷ்டப்படவில்லை. நாளைக்குப் புருஷன் வீட்டுக்குப் போனால் இருக்கவே இருக்கிறது கெடுபிடி, கட்டுப்பாடு எல்லாம். ஏழு வருஷம் கழித்துப் பாட்டியைப் பார்க்க வந்திருக்கும் பெண்ணை அதட்டக் கூடாது அல்லவா?

'மணமகன் தேவை' என்ற விளம்பரத்தைப் பார்த்து விட்டுப் பல கடிதங்கள் டோராஜனுக்கு வந்தன. காலையில் தபால் வந்ததும் முதல் காரியமாக டோராஜனும் காமுவும் எதிரும் புதிருமாக உட்கார்ந்து கொண்டு தபால்களைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தார்கள். எல்லாக் கடிதங்களும் ஜாதகங்களுடன் வந்தன. பையன் வயசு எத்தனை, பையனின் சகோதர சகோதரிகள் எவ்வளவு, அந்தஸ்து, வேலை என்ன, சம்பளம் எவ்வளவு முதலிய எல்லா விவரங்களையும் முதல் மூச்சிலேயே எழுதியுள்ள கடிதங்களை மட்டும் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டார்கள். அவற்றில் ஒரு வரனைக் காமுவுக்கு ரொம்பப் பிடித்து விட்டது. ஆகவே, மறு தபாலிலேயே அந்தக் கடிதத்துக்குப் பதில் எழுதிப் போட்டான் டோராஜன். உடனே பெண்ணைப் பார்க்க வரலாமென்றும், பெண்ணுக்கும் பையனுக்கும் சம்மதமானால் மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசலாமென்றும் எழுதினான். இரண்டு நாட்களுக்கெல்லாம் பையனிடமிருந்து தபால் வந்துவிட்டது. பையனின் சகோதரி நிர்மலா பெண்ணைப் பார்க்க வரப்போவதாக எழுதியிருந்தாள். "அந்தப் பெண் எதற்காக என்னைப் பார்க்க வருகிறாள்? அவளா மாப்பிள்ளை?" என்றாள் காமு கோபத்துடன். "அவசரப்படாதே, காமு! முதலில் அந்தப் பெண் உன்னைப் பார்த்து மனதிற்குப் பிடித்து விட்டால், அவன் பிற்பாடு வந்து பார்க்கலாம் என்பது எண்ணமாயிருக்கும். உதவாக்கரைப் பெண்ணாக இருந்தால் அனாவசியமாக லீவ் எடுத்துக்கொண்டு வருவானேன் என்பதற்காக அவன் முதலில் தங்கையை அனுப்ப முடிவு செய்திருக்கலாம். ஆனால் உன் அழகைப் பார்த்து அந்தப் பெண்ணே பிரமித்துப் போய் இங்கேயே உட்கார்ந்து விடப் போகிறாள். போன தங்கையைக் காணோமே என்று அந்தப் பையனும் புறப்பட்டு இங்கே வந்து உன்னைப் பார்த்து மூர்ச்சையாகி விழப் போகிறான்!" என்றான் டோராஜன். காமு சிரித்தாள்.

மறு நாள் நிர்மலா வரும் தினம். இப்பொழுதே பிடித்து, நாமு அம்மாள் பேத்திக்குச் சரமாரியான கட்டளைகள் இட்டுக் கொண்டிருந்தாள். "காமு ஜடைக்கொச்சை வைத்துப் பின்னிக்கோ. தாழம்பூ பின்னல் போட்டுக்கோ. உங்க தாத்தா என்னைப் பார்க்க வருகிறபோது என் தாழம்பூப் பின்னலைப் பார்த்துவிட்டுத்தான் மயங்கிப் போயிட்டாராம். ஹார்மோனியத்தை எடுத்து வைத்துக்கொண்டு நல்ல பாட்டாக ஏது பாடணும், தெரிஞ்சுதா? 'உம்' என்று உட்கார்ந்திருக்கப்படாது!" என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தாள். "ஏன்? புல்லாக்குப் போட்டுக்கொண்டு, காலில் மருதாணி இட்டுக் கொள்ள வேண்டாமா? ஹார்மோனியத்தோடு, 'சகுன ஜீவனு' பாட்டும் பாட வேண்டாமா?" என்று எரிச்சலுடன் கேட்டாள் காமு.

## 3

மறு நாள் காலை சுமார் ஒன்பது மணிக்கு நிர்மலா வாசலில் ஒரு ஜட்கா வண்டியிலிருந்து இறங்கினாள். டோராஜன் வாசலுக்கு வந்து அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு உள்ளே போனான். அவளுக்கு

செய்யணும் என்று அவனுக்குத் தோன்றி யதே! 'சட்புட்' என்று வாங்கிப்பார்!"

"ஆகட்டும், அம்மா! நாளை பேப்பரிலே ஒரு விளம்பரம் கொடுத்து விடுகிறேன். 'இருபத்திரண்டு வயதான பி. ஏ. படித்த அழகான பெண்ணுக்கு முப்பது வயதான, நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை' என்று விளம்பரத்தில் எழுதி விடுகிறேன். சரிதானே?"

"விளம்பரமா! ரொம்ப அழகாயிருக்கு... நான் விளம்பரம் கொடுத்தா உங்கள் அப்பாவைக் கல்யாணம் செய்து கொண்டேன்? எல்லாம் தலை கீழாத்தான் இருக்கு!"

"இல்லையம்மா! இப்பொழுது காலம் ரொம்ப மாறிப்போச்சு!" என்று பழைய பல்லவியைச் சொல்வதற்கு இருந்தான் நடராஜன். ஆனால் அதைச் சொல்லிச் சொல்லி அவனுக்கே அலுத்துப் போய் விட்டது. சொல்லியும் உபயோகமில்லை. ஆகவே, "அம்மா, இப்படி விளம்பரம் போட்டால்தான் அண்ணாவுக்குத் திருப்தியாக இருக்கும். இல்லாவிட்டால் நாம் ஒன்றுமே செய்யவில்லை என்று அவர் நினைத்துக் கொண்டு விடுவார்!" என்று அவன் கூறினான்.

"அப்படியானால் இந்த மாதிரி பேப்பரிலேபோடு. பெண் வயசைச் சொல்லாதே! இத்தனை வயசிலும் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகலை என்றால் என்னமோ ஏதோ என்று எண்ணிக் கொள்வார்கள். அதனால் உன் வயசைக் கூட நான் யார் கிட்டேயும் சொல்கிறது இல்லை. முப்பது வயசாகியும் உனக்குக் கல்யாணம் ஆகலை என்றால் முடமோ, ஊமையோ......"

"பைத்தியமோ என்று கூட நினைப்பார்கள்!" என்று பூர்த்தி செய்தான் நடராஜன்.

"உனக்கு எல்லாம் கேலிதான்......அப்புறம், பெண்ணுக்கு வீட்டு வேலை செய்யத் தெரியும் என்று எழுது. கோத்திரம் பாரத்வாஜ கோத்திரம். இந்தக் கோத்திரத்தைத் தவிர மற்ற கோத்திரத்துப் பையன்தான் நமக்குத் தேவை. பையன் குடும்பம் நல்ல குடும்பமாக இருக்கவேணும். ஜாதகத்தையும் அனுப்பச் சொல்லி எழுது. பையன் குடுமி வைத்துக் கொண்டும் நெற்றியில் விபூதி இட்டுக் கொண்டும் இருக்க வேண்டும். சந்தியாவந்தனம் பண்ணத் தெரியாத பையன் வேண்டாம்" என்றாள் தர்மு.

நடராஜன் "ஆகட்டும், அம்மா! அப்படியே செய்து விடுகிறேன்" என்று சொன்னான். அம்மாவின் மனம் கோணக் கூடாது என்பதற்காகவும் அம்மாவை ஏமாற்றக் கூடாது என்பதற்காகவும் பத்திரிகையில் தாயாரின் இஷ்டப்படியே விளம்பரம் கொடுத்து விட்டான்.

## 2

மறுநாள் காலை காமு சென்னைக்கு வந்து சேர்ந்தாள். பாட்டியிடம் காமுவுக்கு அலாதி வாஞ்சை உண்டு. வண்டியிலிருந்து கீழே இறங்கும்போதே, "பாட்டி!" என்று கூவினாள். சந்தோஷ மிகுதியில் பாட்டியின் கழுத்தை அவள் இறுகக் கட்டிக் கொண்டதில், கிழவிக்குத் தொண்டை அடைத்துக் கொண்டு மூச்சுத் திணறிப் போய் விட்டது. போன உயிர் திரும்பி வந்த பிறகு, தர்மு அம்மாள், "காமு, ரொம்ப உயர்ந்துதான் போய்விட்டாய்!" என்றாள். பக்கத்திலிருந்த நடராஜன், "அம்மா, அவள் உயரம் அதிகமில்லை. காலில் போட்டுக் கொண்டிருக்கிற 'ஹைஸ் ஷூ' உயரத்தை அதிகமாகக் காண்பிக்கிறது" என்றான். தர்மு குனிந்து காலைப் பார்த்துவிட்டு, கையைக் கன்னத்தில் வைத்துக் கொண்டாள். "எப்பொழுது பிடித்து இந்தக் கூத்தெல்லாம்? ஆனால் நான் கர்நாடகம்தானே? நான் குழந்தையாக இருந்தபோது இதெல்லாம் போட்டுக் கொண்ட





# பெண் பார்க்க வந்தவள்



வி. எஸ். ஆர்.

அன்றைய தபாலில் நடராஜனுக்கு எதிர்பாராத கடிதம் வந்தது. அதை ஒரு தடவைக்கு இரண்டு தடவை படித்து விட்டுத் தாயாரிடம் எடுத்துக்கொண்டு போனான்.

“அம்மா, அண்ணனிடமிருந்து தபால் வந்திருக்கிறது. வாசிக்கட்டுமா?” என்று பவ்யமாகக் கேட்டான்.

கூடத்தில் ஒரு அடக்கமான மூலையில் உட்கார்ந்து கொண்டு ஜபம் செய்துகொண்டிருந்த தர்மு அம்மாள் உற்சாகத்துடன், “வெங்குட்டுவா எழுதியிருக்கான்? அவன் கிட்டயிருந்து கடுதாசு வந்து ஒரு மாசத்துக்கு மேலே ஆகப்போகிறது...நடராஜா! இப்போ ராகுகாலம் ஒன்றும் இல்லையே?... ஆமா, இன்னிக்குச் சாயங்காலம்தான் ராகு காலம்...... படி, கேட்போம்” என்றாள்.

‘வந்த கடிதத்தைப் படிப்பதற்குக் கூடவா நல்ல வேளை பார்க்க வேண்டும்?’— என்று நினைத்து நடராஜன் சிரித்துக் கொண்டான்; பின்னர் கடிதத்தை உரக்கப் பின்வருமாறு படித்தான்.

தர்முவுக்குக் காது கொஞ்சம் மந்தம்.

“அன்புள்ள சிரஞ்சீவி நடராஜனுக்கு, அநேக ஆசீர்வாதம். என்னைத் திடீரென்று டில்லிக்கு மாற்றிவிட்டபடியால் ....” என்று நடராஜன் படிக்கும்போதே தர்மு குறுக்கிட்டாள்.

“‘க்ஷேமம். க்ஷேமத்துக்கு எழுதவும்’ என்று எழுதவில்லை, பார்த்தாயா? சரி...... மேலே வாசி!”

“என்னைத் திடீரென்று டில்லிக்கு மாற்றிவிட்டபடியால் பக்கஜத்துடன் வருகிற வெள்ளிக்கிழமை ஆகாய மார்க்கமாக அங்கே போகிறேன். இந்தச் சந்தர்ப்பத்தில் காமுவை எங்களுடன் அழைத்துக் கொண்டு போவது உசிதமல்ல என்று நினைக்கிறேன். ஆகவே, நாளை ரயிலில் அவளை உன்னிடம் அனுப்பி வைக்கிறேன். நீதான் அவளைப் பார்த்துக் கொள்ள வேண்டும். அவளை உன்னிடம் அனுப்புவதற்குரிய முக்கிய காரணத்தை நீ தெரிந்து கொண்டிருப்பாய். வருகிற தை மாதத்திலாவது அவள் கல்யாணத்தை முடித்துவிட வேண்டும். அவள் பட்டணத்தில் இருந்தால்தான் தகுந்த வரனைப் பார்த்து ஏற்பாடு செய்யச் சௌகரியமாக இருக்கும். காமுவுக்கு ஏற்ற வரனை நிச்சயிப்பது உன்னுடைய பொறுப்பு என்று சொல்ல வேண்டியதில்லை. அது சம்பந்தமாக உன்னிடமிருந்து கடிதத்தை அவ்வப்பொழுது எதிர்பார்க்கிறேன். அம்மாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளவும்.

வெங்கடராமன்.”

கடிதத்தைப் படித்து முடித்ததும், “அம்மா, ஒரு பெரிய பொறுப்பை அண்ணா என் தலைமேல் சுமத்தியிருக்கிறாரே, காமுவுக்கு வரன் தேடி நிச்சயிப்பது அவ்வளவு சாமானிய விஷயமா? அடேயப்பா!” என்றான். ‘அடேயப்பா!’ என்ற வார்த்தையில் ‘டே’ என்ற எழுத்தை அவன் அழுத்தமாக உச்சரித்ததிலிருந்து, அந்த பாரம் சாமான்யமானதில்லை என்று அவன் கருதுவதாகத் தோன்றியது.

“ஆமாம்; வரன் பார்க்கிறதிலேயும் கல்யாணம் நடத்தி வைக்கிறதிலேயும் ரொம்ப அனுபவசாலியோ இல்லையோ நீ? அதனால்தான் அந்தப் பொறுப்பை உன் தலையில் கட்டியிருக்கிறான்!...... வயசிலே முப்பது ஆகிவிட்டது, தன் சொந்தக் கல்யாணமே இன்னும் ஆனபாடில்லை. பொம்மனாட்டிகளைக் கண்டாலே பிடிக்கலையாம். சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறானாம்! இப்பேர்ப்பட்ட பிள்ளையிடம் கல்யாணம் நடத்திவைக்கிற பொறுப்பை ஒப்பித்திருக்கிறானே? பேஷ்!” என்றாள் தர்மு அம்மாள்.

“‘குரங்கை நினைத்துக்கொண்டு மருந்து சாப்பிடாதே!’ என்று ஒரு வைத்தியன் சொன்னானாம். அந்த நோயாளி மருந்து சாப்பிடுகிற போதெல்லாம் குரங்கைத் தவிர வேறு ஒன்றையும் நினைத்துக் கொள்கிறதில்லையாம். அதுமாதிரி கல்யாணத்தைப் பற்றியே நான் நினைக்கக் கூடாது என்று விரதம் வைத்துக் கொண்டிருக்கிறேனோ இல்லையோ, அதனால்தான் கல்யாணமே நான் செய்து வைக்க வேண்டும் என்று ஏற்பட்டிருக்கும் போலிருக்கிறது!” என்றான் நடராஜன்.

“போகட்டும், பெண்ணுக்கு இருபத்திரண்டு வயசான பிறகாவது கல்யாணம்




### கடக் கட!

ஒருவர் பலபேருக்கு நடுவில் விகடமாகப் பேசிக்கொண்டிருந்தார். அதைக் கேட்டவர்களில் ஒருவரும் சிரிக்கவில்லை. உடனே அவருக்குக் கோபம் வந்துவிட்டது.

அவர்:—என் ஹாஸ்யப் பேச்சை நினைத்து ஒரு வருஷம் கழித்துச் சிரிப்பீர்களாக்கும்?

ஒருவர்:—இல்லை; உம்முடைய ஹாஸ்யத்தைக் கேட்டு மூன்று வருஷத்துக்கு முன்னாலேயே சிரித்தாகிவிட்டது!

★

### ஊகம்

கணவன்:—என்ன பத்மா, பொழுது விடியும் சமயம்போலிருக்கிறதே!

பத்மா:—அது எப்படித் தெரிந்தது உங்களுக்கு?

கணவன்:—நம்முடைய குழந்தை அழுகையை நிறுத்திவிட்டுத் தூங்க ஆரம்பித்திருக்கிறான்!

★

### அவன் நினைத்தது!

மனைவி (கணவனுக்குச் சாதம் பரிமாறிக் கொண்டே):—உங்களுக்கு ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்ல வேண்டும்.

கணவன் (சந்தோஷத்துடன்):—அப்படியா, என்ன அது?

மனைவி (சிரித்துக் கொண்டே):—நம்ம இரண்டு பேர் மாத்திரம்தானே இந்த வீட்டில் இருக்கிறோம்? சீக்கிரத்தில் நம் குடும்பத்திலே ஒரு எண்ணிக்கை அதிகமாகப் போகிறது!

கணவன்: — அப்படியானால்......நீ......உனக்கு......!

மனைவி:—இல்லை, இல்லை. அம்மா வரப் போகிறாள். கடிதம் வந்திருக்கிறது!

### லாபம்தான்!

நண்பர்:—இந்தக் கடிகாரத்தை இவ்வளவு குறைந்த விலைக்குக் கொடுக்கிறீரே, இதிலே உமக்கு என்ன லாபம் கிடைக்கப் போகிறது?

கடைக்காரர்:—இப்பொழுது லாபம் இல்லைதான். ஆனால் இந்தக் கடிகாரத்தை ரிப்பேர் செய்ய என்னிடம்தான் வர வேண்டும். அப்பொழுது இரண்டு மடங்காக வசூல் செய்துவிடுவேன்.

★

### தெரியவில்லையா?

டாக்டரிடம் வைத்தியம் பார்க்க வந்த ஒருவர் கால் தவறி டாக்டர்மீதே விழுந்துவிட்டார்.

டாக்டர்:—என் ஐயா, உமக்குக் கண் தெரியவில்லை? மேலே வந்து விழுகிறீரே?

நோயாளி:—ஆமாம், ஸார்! கண்தான் தெரியவில்லை. அதைப் பார்த்துக் கொள்ளுவதற்குத்தான் வந்திருக்கிறேன்.

★

### சரிதான்!

கணவர்:—கமலம்! ஒரு மாதத்துக்கு முன்னால் நம்ம வீட்டிலே ஒருத்தி நிலையைக்



காமொஹினி வைத்துக் கொண்டு வேலைக்கு வந்திருந்தாளே, அவள் பெயர் என்ன?

கமலம்:—பூக்காவனம்!

நெருங்கியது. குழந்தை ஒரு பொம்மைக்காக அழுதான். மோஹன் எவ்வளவு சொல்லியும் பிடிவாதமாக உடனே வேண்டுமென்று அடம் பண்ணியது குழந்தை. மோஹன் வேலைக்காரனை அழைத்தான். ஆனால், வேலைக்காரன் அங்கிருந்தால்தானே ;—அவனையும் என் சக்தியால் சற்று நேரத்திற்கு முன்னமேயே அங்கிருந்து வெளியேற்றி விட்டேன். வெளியே போன அவன் திரும்ப வீட்டிற்கு வரமுடியாமல் செய்வதற்காகக் கடுமையான மழையையும் ஏவினேன். இடியும் மின்னலும் சுற்றுலகத்தையே கலக்கியது. குழந்தையின் அழுகை அதிகமாகியது. தானே கடைக்குப் போய், குழந்தை கேட்கும் பொம்மையை வாங்கப் புறப்பட்டான் சந்திரமோஹன்.

“கடைக்குப் போய்விட்டு மோஹன் திரும்ப வீட்டிற்கு வருவதற்குள், என் திட்டத்தின்படி காரியத்தை முடித்து விட்டேன். திட்டத்தின் கடைசி அத்தியாயமும் முடிந்தது. மோஹன் திரும்பி வந்து பார்த்தான். அவனுடைய பங்களா இடிந்து கிடந்தது. அதைக் கண்டவுடன் அவன் மனமும் இடிந்தது. கொஞ்ச நேரத்திற்கு முன் இடித்த இடி பங்களாவின்மேல் விழுந்து விட்டது.

“இடிந்த வீட்டினுள் அவன் ஓடினான். வீட்டைச் சுற்றி ஒரே கும்பல். எல்லோருடைய கண்களும் மோஹனைப் பச்சாதாபத்துடன் பார்த்தன. சிலர் கண்களில் நீரே வழிய ஆரம்பித்து விட்டது. எல்லோருமாகச் சேர்ந்து செங்கலையும், கல்லையும் புரட்டி, உள்ளே நசுங்கிக் கிடந்த மோஹனின் பொக்கிஷத்தை வெளியே எடுத்தார்கள். குழந்தையின் கோரநிலை அவன் மூளையைத் தாக்கியது. என் சக்தியின் கொடூரத்தைத் தாங்க முடியாமல் அவன் அலறினான். நான் சிரித்தேன். ‘ஆஹா ஹா’ என்று ஆர்ப்பரித்தேன். திடீரென்று மோஹன் சிரித்தான். நானும் சிரித்தேன். மறுபடியும் அவன் சிரித்தான். திடீரென்று அழுதான். என் திட்டம் நிறைவேறிவிட்டது. நான் செய்யவேண்டிய காரியத்தைச் செய்து முடித்து விட்டேன். இப்பொழுது அவன் ஒரு பைத்தியம்.”

இதைச் சொல்லிவிட்டு அவன், “எப்படியிருக்கிறது கதை?” என்றான்.

நான் காதைப் பொத்திக்கொண்டேன். அவன் பயங்கரமாக ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு, “இதை நீ எழுது. நான் இப்போது அடுத்த வீட்டுக்குப் போயாக வேண்டும், நேரமாகி விட்டது” என்று சொல்லிவிட்டு எழுந்தான்.


**க ல் கி**

( வாரப் பதிப்பு )

●

**ச ந் தா   வி வ ர ம்**

| | ஒரு வருஷம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா சிலோன் | ரூ. 13 - 0 - 0 | 6 - 8 - 0 |
| பர்மா | ரூ. 16 - 4 - 0 | 8 - 2 - 0 |
| மலேயா வெளிநாடு | ரூ. 13 - 0 - 0 | 8 - 0 - 0 |

குறிப்பு:—வி. பி. பி. மூலம் அனுப்புவது கிடையாது. தயவுசெய்து முன் பணம் அனுப்ப வேண்டும்.

சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

மானேஜர் : கல்கி காரியாலயம் - சென்னை


திடுக்கிட்டு நான் எழுந்தேன். கடியாரத்தைப் பார்த்தேன். மணி நான்கு. பேனாவைக் கையில் பிடித்தபடி அப்படியே ஈஸிசேரில் தூங்கி விட்டேன் போலும்! உடனே அடுத்த வீட்டுக்குப் போய் அந்தக் குழந்தையைப் பார்க்க வேண்டுமென்று துடித்தது என் உள்ளம். மனைவியை அழைத்துக்கொண்டு அங்கு சென்றேன். வீடு கலகலப்பாக இருந்தது. உள்ளே போனேன். எல்லோருடைய முகத்திலும் சந்தோஷம் ததும்பியிருந்தது. என்னைப் பார்த்ததும் அந்தக் குழந்தையின் தந்தை எழுந்து வந்து என்னைக் கட்டித் தழுவிக் கொண்டு, “குழந்தை பிழைத்துக் கொண்டது. இனி அதன் உயிருக்கு ஆபத்து இல்லை. டாக்டர் கெட்டிக்காரர். காப்பாற்றி விட்டார்!” என்றார்.

நானும் குழந்தையைப் பார்த்தேன். புத்துயிர் பெற்றதைப் போல இருந்தது அது. கண்களை விழித்து எல்லோரையும் பார்த்தது. வறண்ட அதன் உதடுகளிலே ஒரு மலர்ச் சிரிப்புத் தவழ்ந்தது.

“டாக்டராவது, மருந்தாவது! விதி பலமாக இருக்கும்போது நோய் என்ன செய்துவிட முடியும்?” என்றார் அங்கிருந்த ஒரு கிழவர்.

நான் திகைத்து நின்றேன். ஒருவேளை அது விதியின் செய்கையாகத் தான் இருக்குமோ? சாவிலிருந்து குழந்தையைக் காப்பாற்றியது விதிதானோ?

பொழுதானே என் திட்டம் நிறைவேறும். என் திட்டம் என்ன? இப்பொழுது இவன் அடைந்திருக்கிறானே, இந்த நிலையை அடையவேண்டும்.

“மோஹனின் தந்தை அவன் காதல் விஷயத்தில் குறுக்கே நின்றார். சந்திராவைக் கலியாணம் செய்துகொள்ள அவர் அனுமதி கொடுத்திருப்பார். ஆனால், என் சக்தியினால் அவர் மனதை மாற்றி அதைக் கல்லாக்கினேன். மகனுக்கும் தந்தைக்கும் வெறுப்பை மூட்டினேன். சொத்தில் தனக்குள்ள பாகத்தைப் பிரித்துக்கொண்டு, வீட்டை விட்டு வெளியேறினான். நான் இட்ட திட்டத்தின் முதல் அத்தியாயம் முடிந்தது.

“வெளியேறிய மோஹன், சந்திராவை மணந்துகொண்டு ராணி பங்களாவில் தங்கினான். அடுத்தபடியாக என் திட்டத்தின் இரண்டாவது அத்தியாயம் ஆரம்பமாகியது. கொஞ்ச காலம் அவர்களை அவர்கள் போக்கில் விட்டேன். சந்தோஷமாக அவர்கள் வாழ்நாள் கழிந்துகொண்டிருந்தது. அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தையும் பிறந்தது. அவர்கள் ஆனந்தம் அதிகமாகியது. அப்படியே அவர்களை விட்டுவிட்டால், என் திட்டம் என்ன ஆவது? என்னுடைய சக்தியைப் பிரயோகித்தேன். ஸ்திரமென்று நம்பிவந்த அவர்களுடைய ஆனந்தக் கட்டிடம்,



பிரசங்கி:—சபையோர்களே! இப்பொழுது நான் பேசப்போவதெல்லாம் எப்படியும் நாளைப் பத்திரிகைகளில் வரப்போகிறது. அதனால் நான் உங்களுக்குச் சிரமம் கொடுக்காமல் என் பிரசங்கத்தை இத்துடன் முடித்துக் கொண்டு விடுகிறேன்!

ஆட்டம் கொடுத்தது. பிரசவ வேதனையால் சந்திராவிற்கு ஜன்னி ஏற்பட்டது. என்னுடைய பிடியிலே திண்டாடித் திணறினார்கள். இருபத்து நான்கு மணி நேரத்தில் சந்திராவை யமலோகப் பிரஜையாக மாற்றினேன். மோஹன் கதறினான், முட்டினான், மோதினான், அழுதான்.

“ஏன் முகத்தைச் சுளிக்கிறாய்? இப்படிச் செய்து விட்டேன் என்பதற்காகவா? இப்படிச் செய்யாவிட்டால், பின் எப்படித்தான் என் திட்டம் நிறைவேறும்? அவனைப் பிரித்தும், என் எண்ணம் நிறைவேறவில்லை. சந்திராவை நினைத்து அவன் உருகினானே யொழிய, பைத்தியமாக மாறவில்லை. காரணம், அவன் குழந்தைதான்! குழந்தை மிகவும் அழகாக இருந்தது.”

இந்தச் சமயத்தில் என் குழந்தை தூக்கத்தில் ஏதோ முனகியது. குழந்தையின் கைபட்டதனால், என் மனைவியின் தூக்கம் சிறிது கலைந்தது. அரைத் தூக்கத்தில் அவள் புரண்டு படுத்தாள். என் மனைவியையும், குழந்தையையும் அவன் பார்த்துக் கொண்டிருந்தான். என் உடல் பயத்தினால் சிறிது நடுங்கியது.

“கதையைக் கேள்” என்று சொல்லி விட்டு அவன் மீண்டும் சொல்லத் தொடங்கினான்:

“மோஹனின் ஆசையெல்லாம் அந்தக் குழந்தையின் மீது திரும்பிவிட்டது. ஒரு ஐந்து வருஷத்திற்கு அவனை அப்படியே விட்டுவிட்டேன். ஏன் தெரியுமா? குட்டோடு கூடாக மீண்டும் துக்கத்தைக் கொடுத்தால் அவன் மனம் இருகினாலும் இருகிவிடும். உலகமே மாயம் என்று சபலம் தட்டி சாமியாராக இமய மலையை நோக்கிச் சென்றாலும் சென்று விடுவான். அதற்காகத்தான் முடிவில் கொஞ்சம் சுகத்தைக் கொடுத்தேன்.

“ஐந்து வருஷத்தில் குழந்தையும் நன்றாக வளர்ந்து விட்டான். அந்தக் குழந்தைதான் அவனுக்கு எல்லாம். அந்தக் குழந்தையை விட்டுப் பிரிவதே இல்லை. எங்கு சென்றாலும் குழந்தையை அழைத்துச் செல்வான். க்ஷணநேரம் கூடக் குழந்தையை விட்டுப் பிரியாமல் இருந்தான். அதற்கும் வழி செய்தேன். குழந்தைக்கு ஜுரத்தை உண்டாக்கினேன். ஜுரத்தைக் கண்டதும் மோஹன் துடித்தான். தன் ஆசை யெல்லாம் உருவாகி யிருக்கும் அந்தப் பச்சிளம் கொழுந்து வாடிக் கருகிவிடக் கூடாதே என்று ஏங்கினான். என் திட்டத்தின் கடைசி அத்தியாயமும் முடியும் நேரம்

'கடவுள் மாதிரிப் பேசுகிறானே!' என்று அதிசயித்தேன் நான்.

"கடவுளைக் கூட சில சமயங்களில் எனக்கு அடிமையாக்கி யிருக்கிறேன். ......சரி, தம்பி! நேரம் ஆகிறது. எனக்கு இன்னும் கொஞ்ச நேரத்தில் முக்கியமான வேலை இருக்கிறது. சீக்கிரம் நான் சொல்லும் கதையைக் கேள். பிறகு எழுது" என்றான்.

நானும் அவனுக்குப் பயந்து கேட்க ஆரம்பித்தேன். அவன் சொன்னான்:

"எனக்குப் பல பெயர்கள் உண்டு. உலகத்தார் என்னை ஏசும்போது ஒரு பெயர், புகழும்போது ஒரு பெயர் இடுகிறார்கள். என்னை யார் ஏசினாலும் பேசினாலும், எனக்கு அதைப்பற்றிக் கவலை இல்லை. என் வேலையை நான் ஒழுங்காகச் செய்துகொண்டு தானிருக்கிறேன். என்னுடைய சக்தியினால் சிவனைக்கூட ஒரு சமயம் படாதபாடு படுத்தி யிருக்கிறேன். என் சக்தியிலே கோபுரம் குப்பை மேடாகும்; குப்பை மேடு கோபுரமாக எழும்பும். மனிதன் பிறக்கும்போதே நானும் அவனுடனேயே பிறக்கிறேன். அவன் பிறந்து உலகை விட்டு மறையும் வரை, அவன் என் ஆட்சிக்குட்பட்டவனே.

"என் பெயர் விதி. சாதாரண மனிதன் புகழ் ஏணியில் சறுக்காமல் ஏறும்போது என்னை யோகம் என்று அழைக்கிறான். புகழின் உச்சியில் இருப்பவன், வழுக்கி மண்ணைத் தொடும்போது தலைவிதி என்று ஏசி அழைக்கிறான். பழுத்த ஞானிகளுக்கு இந்த இரண்டு பெயரும் ஒன்றே......... அதோ தெருவில் ஊளை விடுகிறானே ஒருவன், அவன் யார் தெரியுமா? அவன் ஒரு பைத்தியம். இரவு — பகல் என்ற வித்தியாசம் இல்லாமல், தூக்கம் இழந்து சதா பேசிக்கொண்டும் சிரித்துக் கொண்டும் சில சமயங்களில் அழுது கொண்டும் இந்த ஊரில் திரிந்து கொண்டிருக்கிறான். என்னுடைய சக்தியிலேதான் அவன் அந்த நிலையை அடைந்தான். கட்டிலிலும், தொட்டிலிலும், மார் மேலும், தோள் மேலும், துன்பம் தெரியாமல் வளர்ந்த அவன், இன்று இந்த ஊரின் வீதியிலே நாதியற்றுத் திரிகிறான். ஆம், உண்மைதான். உனக்கு அவன் பைத்தியம் என்றுதான் தெரியும். ஆனால், அதற்குக் காரணம் தெரியாது. அந்தக் கதையைக் கூறத்தான் வந்தேன். கவனமாகக் கேள்."

அவன் மேலும் கூறியதாவது:

"குற்றாலத்திலே ராணி பங்களா என்று ஒரு பங்களா இருந்தது. இப்பொழுது அது இல்லை. இப்பொழுது அது இருந்த இடத்தில் ஒரு குட்டிச் சுவர்தான் இருக்கிறது. அந்த பங்களாவிலே, இதோ அலைகிறானே பைத்தியக்காரன், இவன் வசித்து வந்தான். இவன் பெயர் சந்திரமோகன். இவனும் இவன் 'காதலி சந்திராவும் தான் அந்த பங்களாவில் இருந்தார்கள். எங்கேயோ இருந்த அவ்விருவரையும் இழுத்து வந்து சந்திக்கச் செய்தேன். இருவர் உள்ளத்திலும் என் சக்தியினாலே காதலை மூட்டினேன். மோகன் பணக்காரன். ஆனால் சந்திராவோ பரம ஏழை. இருவருக்கும் நடுவேயிருந்து, காதலைக் கொழுந்துவிட்டு எரியச் செய்தேன். அப்





# விதியின் சிரிப்பு

சாது

அன்று நான் படுக்கும்போது மணி பதினொன்று இருக்கும். பக்கத்து வீட்டில் உள்ள என் நண்பனின் ஒரே குழந்தை ரகுவுக்கு டைபாயிடு ஜுரம். அவர்களுக்குத் துணையாக இரவு பதினொரு மணி வரை அவர்கள் வீட்டில் உட்கார்ந்திருந்தேன். டாக்டர் வந்து ஒரு ஊசி போட்டுவிட்டு இரண்டு மணி நேரத்தில் திரும்பி வருவதாகச் சொல்லி விட்டுப் போனார். பிறகு என் நண்பனைத் தேற்றி விட்டு, என் மனைவியையும் அழைத்துக் கொண்டு வீட்டிற்கு வந்து விட்டேன். படுக்கையில் படுத்தேன். ஆனால் தூக்கம் வந்தால்தானே? அடுத்த வீட்டில் குழந்தை ரகுவின் முனகல் கேட்டுக் கொண்டே இருந்தது.

மணி பன்னிரண்டு அடித்தது. ஆனால் தூக்கம் வரவே இல்லை. பக்கத்தில் என் மனைவி அரைத் தூக்கத்தில் புரண்டு கொண்டிருந்தாள். அவள் அருகில் என் குழந்தை பாலு சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தான். நேரமோ மிகவும் மெதுவாகப் போவதாகத் தோன்றியது. திடீரென்று படுக்கையை விட்டு எழுந்தேன். மேஜையைத் திறந்து பேனாவையும் கடிதாசியையும் எடுத்து வைத்துக்கொண்டு பலநாளாக யோசித்து வைத்திருந்த ஒரு கதையை எழுத நினைத்தேன். பேனாவை எடுத்துப் பிள்ளையார் சுழியும் போட்டுவிட்டேன். ஆனால், கதையை எப்படி ஆரம்பிப்பது? சற்று யோசித்தேன். அப்பொழுது என் தோளைப் பிடித்து யாரோ அழுத்துவது போல் தோன்றியது. என் மனைவிதான் எழுந்து வந்து தொடுகிறாள் போலும் என்று நான் சும்மா இருந்துவிட்டேன்.

இப்படித்தான் எத்தனையோ சமயங்களில் அவன் வந்து என் வேலைகளைக் கெடுத்திருக்கிறான். ஆகையால், இப்பொழுதும் கொஞ்சி என் வேலையைக் கெடுத்து விடுவானோ என்ற பயத்தில் திரும்பிக்கூடப் பார்க்காமல் கதையை எழுத ஆரம்பித்தேன். ஆனால், அடுத்த க்ஷணம் என்னுடைய மற்றொரு தோளும் அழுத்தப்பட்டது. 'சரிதான், அவன் வந்துவிட்டான்; இன்று எழுதின மாதிரி தான்!' என்று நினைத்தேன்.

"தம்பி, என்ன எழுதறே?" என்று ஒரு வேற்றுக் குரலைக் கேட்கவே திடுக்கிட்டுத் திரும்பினேன். யாரோ ஒரு மனிதன் பார்க்கப் புதுமாதிரியாக இருந்தான். என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான். என்னை அறியாமல் அவனிடம் ஒரு பயம் ஏற்பட்டது. பயத்தை வெளிக் காட்டாமல், சற்று தைரியமாக "நீ யார்?" என்றேன்.

"பயப்படாதே, சொல்கிறேன்" என்று என் பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான்.

"இப்பொழுது கதைதானே எழுதப் போகிறாய்? நான் சொல்லும் கதையை எழுது" என்றான் அவன்.

'என்ன இது, முன்பின் தெரியாதவன் வந்து தான் சொல்லுகிற கதையை எழுது என்கிறானே!' என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது. என் வியப்பை அவன் எப்படியோ அறிந்துகொண்டு "நீ செய்யப் போகும் காரியத்தை நான் எப்படி அறிந்தேன் என்று ஆச்சரியப்படுகிறாயா? என்னுடைய சக்தியில் தான் நீ எழுதுகிறாய். நீ நினைப்பதெல்லாம் என் சக்தியே!" என்றான்.

ரச்செய்து அவளை ராணியாகப் பிரகடனம் செய்தான்.

முடிசூட்டு விழா வெகு தடபுடலாக நடந்தது. பல தேசங்களிலிருக்கும் அரசர்கள் வந்து அதில் கலந்து கொண்டார்கள். பல நாட்கள் வரை வேடிக்கையும் விநோதமுமாக



இருந்தது. இந்த மகிழ்ச்சியான சமயத்தில் அஹமத் தன் சகோதரர்களை மறந்து விடவில்லை. அவர்களுக்குத் தன்னால் இயன்ற உதவி செய்ய விரும்பினான். இதை அவன் தன் மைத்துனனான ஷாய்பாரிடம் கூறினான். அவன் தனக்கு ஆட்சேபம் இல்லையென்று கூறினான். இதைக் கேட்டு அஹமத் மிக்க மகிழ்ச்சியடைந்தான். அவனுடைய பெரிய அண்ணனாகிய அலி, அஹமதை சோதனை செய்து பெருங் கஷ்டத்துக்கு உள்ளாக்கிய கோஷ்டியைச் சேர்ந்தவன் அல்ல. ஆகையால் அஹமத் தன் சகோதரன் அலிக்கு தனது ராஜ்யத்தில் ஒரு பெரிய மாகாணத்தை அளித்து அதில் ராஜ்யபாரம் செய்யச் சொன்னான். அவர்களும் அதற்கு இணங்கி அங்கு சென்றார்கள். பிறகு மற்றொரு அண்ணனாகிய ஹுசேனுக்குச் சொல்லியனுப்பி, அவனுக்கும் ஒரு மாகாணம் தருவதாக அஹமத் கூறினான். ஆனால் ஹுசேன் தன் வாழ்நாட்களை துறவியாகவே கழிக்கப் போவதாகப் பதில் சொல்லியனுப்பினான்.

அஹமத் தன் அருமை மனைவி பானுவுடன் புகழ்பெற்ற சுல்தானாக விளங்கி வெகு காலம் அமைதியாகவும் நீதியாகவும் ஆட்சி புரிந்தான். அவன் காலத்தில் அந் நாட்டு மக்கள் சுபிட்சமாக வாழ்ந்து வந்தனர். (முற்றும்)

# அதையும் செய்வதா?

கால்வின் கூலிட்ஜ் என்பவர் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்தவர். ஹாஸ்யமாகப் பேசுவதிலும் தமாஷ் செய்வதிலும் மிக்க கெட்டிக்காரர். அவர் ஜனாதிபதியானதும் சில பிரமுகர்களைத் தம் மாளிகைக்கு அழைத்து, அவர்களுக்கு ஒரு விருந்து அளித்தார். விருந்தில் எப்படி நடந்துகொள்வது என்று அவர்களில் ஒருவருக்கும் தெரியவில்லை. கடைசியில், கூலிட்ஜ் என்ன செய்கிறாரோ அதேமாதிரித் தாங்களும் செய்வது என்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

விருந்தில் விதவிதமான உணவு வகைகள் பரிமாறப்பட்டன. கூலிட்ஜ் ரொட்டிகளை எடுத்து ஒவ்வொன்றாகச் சாப்பிட்டார்; அவர்களும் ஒவ்வொரு ரொட்டியாக எடுத்துச் சாப்பிட்டார்கள். கூலிட்ஜ் மற்ற தின்பண்டங்களையும் ஒவ்வொன்றாக எடுத்துச் சாப்பிட்டார்; அவர்களும் அவரைப் பின்பற்றி தின்பண்டங்களை ஒவ்வொன்றாக எடுத்துச் சாப்பிட்டார்கள்.

கூலிட்ஜ் இதைக் கவனித்தார். அவருக்குச் சிரிப்பு உண்டாயிற்று. ஆனால் அதை அடக்கிக் கொண்டார். ஒரு தமாஷ் செய்யவேண்டும் போலத் தோன்றியது அவருக்கு. சிற்றுண்டிகளையெல்லாம் சாப்பிட்டு முடித்த பிறகு ஒவ்வொருவருக்கும் அழகான தட்டுகளில் காப்பி கொண்டு வந்து வைக்கப்பட்டது.

கூலிட்ஜ் காப்பியைப் பிளேட்டில் ஊற்றினார். மற்றவர்களும் அதேமாதிரி காப்பியைப் பிளேட்டில் ஊற்றினார்கள். கூலிட்ஜ் கொஞ்சம் சர்க்கரையை எடுத்து அதைப் பிளேட்டில் போட்டுக் காப்பியைக் கலக்கினார். மற்றவர்களும் அதேமாதிரி சர்க்கரையை எடுத்துப் போட்டுக் காப்பியைக் கலக்கினார்கள். கடைசியில் கூலிட்ஜ் அந்தப் பிளேட்டை எடுத்தார். மேஜைக்கு அடியில் இருந்த ஒரு பூனைக்கு அதை வைத்தார்! விருந்தாளிகள் திகைத்துப் போனார்கள். இப்போது என்ன செய்வதென்று அவர்களுக்குத் தெரியவில்லை.

கொண்டு அஹமதும் ஷாய்பாரும் சுல்தானுடைய நாட்டை நோக்கிப் புறப்பட்டனர். அந்நாட்டின் தலைநகரில் இவ்விருவரும் நுழைந்தவுடன் பயங்கர உருவமுள்ள ஷாய்பாரைப் பார்த்து ஊர் ஜனங்கள் தெருவிலிருந்து ஓடி தங்கள் வீடுகளுக்குள்ளே ஒளிந்து கொண்டனர். அரண்மனைக்குள் அவர்கள் நுழைந்தவுடன் சுல்தானின் காவலாட்களும் ஓடி விட்டனர். அவர்கள் உள்ளே செல்ல எவ்விதத் தடையும் இல்லாததால் அஹமதும் ஷாய்பாரும் சுல்தானின் தர்பார் மண்டபத்திற்குச் சென்றனர். அங்கே சுல்தான் சிம்மாசனத்தில் உட்கார்ந்தபடி தனது மந்திரிகளுடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தான்.

சபையிலிருந்த பிரபுக்களும், மெய்க்காப்பாளரும் குள்ளமனிதனைக் கண்டு நடு நடுங்கி என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தனர். இந்த நிலையில் ஷாய்பார் நேராக சுல்தான் முன் போய் இடிக்கும் குரலில் "என்னை நீ பார்க்க விரும்பினாயாம். இதோ நான் வந்திருக்கிறேன். என்னிடமிருந்து உனக்கு என்ன வேண்டும், சொல்" என்று கேட்டான்.

பூமியே அதிரும்படியான குரலில் ஷாய்பார் இவ்வாறு கேட்டதும் சுல்தான் நடுநடுங்கிப் போனான். அந்தக் குள்ளனைப் பார்க்க அவனுக்கு பயமாயிருந்தது. உடனே கையால் கண்களைப் பொத்திக் கொண்டு ஷாய்பாரைப் பார்க்கா வண்ணம் தலையை எதிர்ப்புறமாகத் திருப்பிக் கொண்டு விட்டான்.

தன்னை வரவழைத்து விட்டு மரியாதையாக வரவேற்காமல் சுல்தான் அவமரியாதையாக நடந்து கொண்டதைக் கண்டு ஷாய்பாருக்குக் கோபம் பொங்கியெழுந்தது. தன் தோள்மீதிருந்த ஐந்நூறு பவுண்டு கனமுள்ள கடப்பாரையை ஓங்கி, "பேசுகிறாயா என்ன?" என்று கேட்ட வண்ணம் சுல்தான் தலையில் அடித்தான். அஹமத் தன் தந்தையைக் காப்பாற்ற முன் வருவதற்குள் சுல்தான் செத்துச் சவமாக விழுந்தான்.

சுல்தானைச் சுற்றி இருந்துகொண்டு அவனுக்குத் துர்ப் போதனை செய்து வந்த வேறு பிரமுகர்களையும் பிரபுக்களையும் ஷாய்பார் அடித்து வீழ்த்தினான். தன் மகனையே சந்தேகிக்கும்படி யோசனை கூறிய அந்த மந்திரவாதிக் கிழவியை வரவழைத்து அவளையும் கொன்று தள்ளினான்.

இந்த ரணகளம் நடந்து முடிந்த பிறகு ஷாய்பார் அஹமதை சிம்மாசனத்திலேற்றி அவனுக்கு முடி சூட்டினான். முடி சூட்டியபின் அங்கே இருந்த அந்த நாட்டு மக்களைப் பார்த்து "அஹமதின் ஆட்சிக்கு உட்பட யாராவது விரும்பவில்லையானால் அவர்களையும் கொன்று விடுவேன். ஜாக்கிரதை!" என்று எச்சரிக்கை செய்தான். நாட்டு மக்களுக்கு என்றுமே இளவரசன் அஹமதிடம் பிரியம் உண்டு. ஆகையால் அவர்கள் மகிழ்ச்சியுடன் அஹமதைத் தங்கள் சுல்தானாக ஏற்றுக் கொண்டனர். இதெல்லாம் முடிந்தவுடன் ஷாய்பார் தனது சகோதரி பாரிபானுவை அழைத்து வந்து அவளைச் சிம்மாசனத்தில் அஹமதின் அருகில் அம

## எத்தனை எலிகள்?

ஒரு மூலையில் சில எலிகள் வாசம் செய்கின்றன. ஒருநாள் ஒரு பூனை அவ்விடம் வந்து சில எலிகளைத் தின்று விடுகிறது. மீதியுள்ள எலிகள் அதைப்போல மற்றொரு மடங்கு எலிகளைச் சேர்த்துக் கொண்டு இன்னொரு மூலைக்கு ஓடுகின்றன. அதே பூனை அவ்விடமும் வந்து முதலில் எவ்வளவு எலிகளைத் தின்றதோ அதே அளவு எலிகளைத் தின்று விடுகிறது. மீதியுள்ள எலிகள் தங்களைப் போல இரண்டு மடங்கு எலிகளைச் சேர்த்துக் கொண்டு மற்றொரு மூலைக்கு ஓடுகின்றன. அவ்விடமும் அதே பூனை வந்து முதலில் சாப்பிட்ட அளவு எலிகளைத் தின்றுவிடுகிறது. மீதியுள்ள எலிகள் தங்களைப் போல மூன்று மடங்கு எலிகளைச் சேர்த்துக் கொண்டு இன்னொரு மூலைக்கு ஓடுகின்றன. பூனை மீண்டும் அவ்விடம் வந்து முதலில் தின்ற அளவு தின்று விடுகிறது. மீதி ஒரு எலியும் மிஞ்சவில்லை. அப்படியானால் முதலில் எவ்வளவு எலிகள் இருந்தன? பூனை எவ்வளவு எலிகளை முதலில் சாப்பிட்டது?

விடை அடுத்த இதழில்

சென்ற வாரப் புதிருக்கு விடை: 26.

## ரா.நா

தந்தை கூறிய படியே இந்த மனிதன் ஒன்றரை அடி உயரம் இருந்தான். அவன் தாடி முப்பது அடிக்குப் புரண்டது. அவன் கண்கள் சிறியதாயிருந்தன. அவன் தலை பிரம்மாண்டமாயிருந்தது. தலைமீது நீளமான ஒரு குல்லாய் அணிந்திருந்தான். அவனைப் பார்த்தால் பயங்கரமாயிருந்தது. அவன் தோள்மீது ஐநூறு பவுண்டு கனமுள்ள கடப்பாரையைச் சுமந்து கொண்டிருந்தான். அவன் தன் மனைவி பானுவின் சகோதரன் என்பது தெரியாமலிருந்தால் அஹமத் அவனைக் கண்டதும் பயந்து எங்காவது ஓடிப் போயிருப்பான்.

ஷாய்பார் தன் சகோதரியிடம் வந்து அஹமதைச் சுட்டிக் காட்டி, அவன் யார் என்று அதிகாரத் தோரணையில் கேட்டான். பானு, "இவர் என் கணவர். இவருக்கு உதவிபுரியத்தான் உன்னை அழைத்தேன்" என்று பதில் கூறினாள்.

கோபம் சற்று தணிந்தவனாய் ஷாய்பார் தன் சகோதரியைப் பார்த்துக் கேட்டான்: "அவர் உன் கணவராயிருந்தால் அவர் சொல்வதைச் செய்ய நான் தயாராயிருக்கிறேன். அவருக்கு என்ன வேண்டும், சொல்!"

"அவருடைய தந்தையாகிய இந்தியா சுல்தான் தமது அரண்மனையில் உன்னைப் பார்க்க விரும்புகிறாராம். என் கணவர் உன்னை அங்கு அழைத்துச் செல்ல நீ சம்மதிக்க வேண்டும்" என்றாள் பானு.

ஷாய்பார், "ரொம்ப சரி. அவர் முன்னால் போகட்டும். நான் அவரைத் தொடர்ந்து பின்னால் செல்லுகிறேன்" என்று கூறினான்.

பானு, "இன்று நேரமாகிவிட்டது. இன்று நீ என்னுடன் இருந்து விட்டு நாளைக்கு சுல்தான் அரண்மனைக்குச் செல்லலாம்" என்றாள்.

பானு அன்றிரவு தன் சகோதரனுக்குப் பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்தாள். விருந்து சாப்பிட்டுக் கொண்டே பானு தன் சகோதரனிடம் அஹமதைத் தான் சந்தித்தது, அவனை விவாகம் செய்து கொண்டது, கலியாணத்திற்குப் பின்னர் நிகழ்ந்த சம்பவங்கள் முதலிய விவரங்களை எடுத்துச் சொன்னாள்.

அடுத்த நாள் காலை பிரயாணத்திற்கான ஏற்பாடுகளை முடித்துக்



பாப்பா மலர்

# மாய மாளிகை

## 9. ஒன்றரை அடி மனிதன்

சீல்தான் அஹமதை நோக்கிக் கூறினன்: "மகனே, நீ இன்னும் ஒரே ஒரு உதவி செய்யவேண்டும். அப்புறம் உன்னை நான் சோதனை செய்யமாட்டேன். உன் மனைவியின் சக்தியையும் நான் பரீட்சை செய்ய மாட்டேன். ஒன்றரை அடி உயரமுள்ள மனிதன் ஒருவனைக் கொண்டு வா. அவன் பேசக் கூடியவனுக இருக்கவேண்டும். ஆனல் ஐநூறு பவுண்டு கனமுள்ள இரும்பை அவன் சுமந்து செல்லத்தக்க பலமுள்ளவனு யிருக்க வேண்டும். அவனுடைய தாடி முப்பது அடி நீளமா யிருக்கவேண்டும்."

தன் தந்தையின் இந்த ஆசையைப் பூர்த்தி செய்ய முடியாது என்று அஹமத் கருதினன். அத்தகைய மனிதன் எங்கு அகப்படப் போகிறுன் என இளவரசன் சந்தேகப் பட்டான். கவலையுடன் தன் மனைவியிடம் வந்து, நடந்ததைச் சொல்லிவிட்டு, "என் தந்தையின் மூட்டான் தனத்தைப் பார்த்தாயா? இம்மாதிரி விசித்திர மனிதன் எங்கே அகப்படப் போகிறுன்? அப்படியே அகப்பட்டாலும் அந்த மனிதன் தன்னிடமுள்ள இரும்பு ஆயுதத்தால் என் தந்தையின் மண்டையை உடைத்துவிட மாட்டானு?" என்று கேட்டான்.

அதற்கு பானு சொன்னுள்: "நீங்கள் அனுவசியமாய் பயப்பட வேண்டாம். சிங்கச் சுனையில் சிங்கங்களிடமிருந்து தப்புவது மிகவும் கஷ்டம். அவைகளிடமிருந்தே நீங்கள் தப்பி விட்டீர்கள். ஒன்றரை அடி உயரமுள்ள மனிதனைக் கண்டுபிடிப்பது கஷ்டம் இல்லை. உங்கள் தந்தை கூறிய மாதிரி குள்ளமாயும் பலவானுயுமுள்ள ஒரு சகோதரன் எனக்கு இருக்கிறுன். அவன் பெயர் ஷாய்பார். ஆனல் அவன் மகா முரடன். அவனுக்கு ஒரு சிறு அதிருப்தி ஏற்படுத்துபவர்களைக் கூட அழித்து விடுவான். அவனை உடனே வரவழைக்கிறேன். என்மீது அவனுக்கு மிக்க அன்பு உண்டு. ஆகையால் அவன் எனக்கு நிச்சயமாக உதவி செய்வான்."




அரண்மனையில் ஒரு பக்கத்தில் ஒரு தங்க வாணுயில் தீ மூட்டிக் கொண்டு வரச் சொல்லி ராணி தன் பணிப் பெண்களுக்கு உத்தரவிட்டாள். அது வந்தவுடன் தீயில் சில வாசனைத் திரவியங்களை எறிந்தாள். உடனே தீயிலிருந்து ஏராளமாகப் புகை கிளம்பிவிட்டது. சில நிமிஷங்களுக்கெல்லாம் ஒரு குள்ள மனிதன் தோன்றினன். பானு அவனை அஹமதுக்குக் காட்டி, "இளவரசரே, இவன் தான் என் சகோதரன் ஷாய்பார்" என்றுள்.

இளவரசனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. தன்

இறங்கி நீராடுங்கள். வாழ்வின் இன்பத்தை அநுபவித்து பிறப்பெய்தினதின் பலனைப் பெறுங்கள்' என்று சொல்லி எங்கள் இருவரையும் கூவி அழைத்தாள்.

'நாமும்தான் குளத்தில் இறங்கிக் குளிப்போமே!' என்ற எண்ணம் என் உள்ளத்தில் உதித்தது. ஆகவே நான் என்னுடைய ஆடைகளைக் களைந்து ஸ்நானத்துக்கு வேண்டிய ஆடைகளை மட்டும் உடுத்திக் கொள்ள முற்பட்டேன். அதைக் கண்ணுற்ற மகாப் பிரபு ரத்னாம்பார் என் கையைப் பிடித்து வேகமாக இழுத்தார். அவருக்கு அப்பொழுது எங்கிருந்துதான் அவ்வளவு உடல் வலிமை வந்ததோ, தெரியவில்லை! அவர் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளுவதற்காக நான் ஆனானப்பட்ட பாடு பட்டேன். ஆயினும் விடுவித்துக் கொள்ள முடியவில்லை. அவர் என்னைப் பிடித்து 'தர தர'வென்று இழுத்துக் கொண்டு நடந்தார். நடந்தாரா? இல்லை, இல்லை! அப்பொழுது அவர் வாயுவேக மனோவேகமாக ஓடிக் கொண்டிருந்தார். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் நாங்கள் அந்தக் குடிசையைத் தாண்டி பழைய பாதையை அடைந்து விட்டோம். பிறகு சற்று ஆசுவாசப் படுத்திக் கொண்டோம். மகாப்பிரபு ரத்னாம்பார் என்னைப் பார்த்து, 'அப்பா குழந்தாய்! கடவுள்தான் நம்மைக் காப்பாற்றினார். நல்ல வேளையாக நாம் மயிரிழை தப்பிப் பிழைத்தோம். கருணாகரனான கடவுளின் கருணை இல்லாவிட்டால் நாம் தப்பியே இருக்க முடியாது!' என்றார்.

அன்று முதல் அந்தப் பெண் மணியின் எழிலுருவம் எத்தனையோ வருஷங்கள் வரை என் கண்கள் முன்னேயே நின்றது" என்று சொல்லி முடித்தான் பீஜகுப்தன்.

* * *

"ஆமாம், அதற்கப்புறம் மகாப் பிரபு ரத்னாம்பார் அதன் ரகசியத்தை உங்களுக்கு எப்பொழுதாவது சொன்னாரோ!" என்று கேட்டாள் யசோதரா.

"இல்லை உலகத்தில் இம்மாதிரி எத்தனையோ அற்புதங்கள் நடக்கின்றன. அவற்றில் பல விஷயங்கள் நம் அறிவுக்குச் சரியாக எட்டுவதே யில்லை. அம்மாதிரி விஷயங்களில் இதுவும் ஒன்று என்று மட்டும் அவர் என்னிடம் சொன்னார்., அதற்குமேல் ஒன்றும் சொல்லவில்லை" என்றான் பீஜகுப்தன்.

அதற்குப் பின் அவர்கள் எல்லோரும் போஜனசாலைக்கு உணவு அருந்துவதற்காக எழுந்து சென்றனர். அன்று யசோதராவுக்கு எதிர்த்தாற்போல் ஒரு புறத்தில் பீஜகுப்தனும் இன்னொரு புறத்தில் சுவேதாங்கனும் உட்கார்ந்தார்கள். யசோதரா உணவு அருந்திக்கொண்டே, "ஸ்வாமி! இன்று தாங்கள் சொன்ன கதை ரொம்ப ரொம்ப சுவாரஸ்யமா யிருக்கிறது. அது மட்டும் அல்ல; அபூர்வமாகவும் இருக்கிறது. அதைக் கேட்டதும் எனக்கு உடலில் மயிர்க் கூச்செடுத்து விட்டது; உள்ளத்தில் உணர்ச்சி மேலிட்டு விட்டது. 'நாமும் இம்மாதிரி ஆச்சரியகரமான அநுபவங்களைக் கண்டு களிப்புற மாட்டோமா?' என்னும் ஆசை உந்தித் தள்ளுகிறது" என்றாள்.

பீஜகுப்தன் சிரித்துக் கொண்டே, "அம்மணி! மனிதன் தானாக அநுபவத்தை அடைந்து விடுவதில்லை. சூழ்நிலையின் காரணமாகத்தான் அநுபவத்தை அடைகிறான்." என்று சொன்னான்.

யசோதராவுடன் பேசுவதற்குச் சுவேதாங்கன் சந்தர்ப்பத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். "அம்மணி! அநுபவம் பெறுவதற்குத்தான் வாழ்க்கை முழுவதும் கிடக்கிறதே!" என்றான் அவன்.

யசோதராவின் முகத்திலே விசித்திரமானதொரு உணர்ச்சி உதித்தது. "இருக்கலாம். ஆனாலும் இந்தச் சிறு வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் எவ்வளவு விலை உயர்ந்தது, தெரியுமா? வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்தையும் அநாவசியமாக வீணாக்குவது மிகத் தவறான காரியம்" என்றாள்.

பீஜகுப்தன் 'கல கல' வென்று நகைத்தான். "நம்முடைய ஒவ்வொரு காரியத்திலும் கண்களுக்குப் புலப்படாததொரு சக்தி வேலை செய்கிறது. அதன் இஷ்டப்படித்தான் காரியங்கள் அனைத்தும் நடக்கின்றன. அவனன்றி ஓரணுவும் அசையாது என்கிறார்களே, அது முற்றிலும் உண்மை. உலகத்திலே இரண்டுவிதமான அபிப்பிராயங்கள் நடமாடி வருகின்றன. சும்மா கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பது வாழ்க்கையல்ல. வாழ்க்கையிலே உணர்ச்சி வேண்டும்; உற்சாகம் வேண்டும்; உத்வேகம் வேண்டும் என்பது ஒரு கட்சி. வாழ்க்கையிலே அமைதி அத்தியாவசியமானது. ஆகவே, வாழ்க்கையை அமைதிக்கு உறைவிடமாக ஆக்கவேண்டும் என்பது இன்னொரு கட்சி. இருதரப்பிலும் சொல்லப்படும் தர்க்கங்களும் வாதங்களும் வெகு அழகாகவே அமைந்திருக்கின்றன. ஆகவே 'எது உண்மை?' என்பதை நிர்ணயிப்பது மிக மிகக் கடினமான காரியமாகி விடுகிறது" என்றான். (தொடரும்)

அநுபவிக்கிறேன். துன்பமும் இன்பமும் கல்லும் மண்ணும் போலக் கலந்தும் கட்டியுமாக மாறி மாறி வருகின்றன. நான் இரண்டையும் அநுபவிக்கிறேன். அநுபவித்துத்தானே தீர வேண்டும்!' என்று சொல்லித் தன் பின் புறத்தைக் கையினால் தட்டிக் காட்டினான்.



நாங்கள் எழுந்து அவன் பின்புறம் தட்டிக் காட்டிய இடத்தைப் பார்த்தோம். அதைக் கண்டதும் பயத்தினால் எங்களுக்குக் குலை நடுக்கமே எடுத்து விட்டது. பின்னால் ரத்தக் குளம் ஒன்றிருந்தது. அதற்கு அழகான படிக்கட்டுகள் வேறு இருந்தன. அந்தக் குளத்திலிருந்து மூச்சைத் திணற அடிக்கும்படியான நாற்றம் வேறு வந்து கொண்டிருந்தது. மகாப் பிரபு தத்துவம்பார் அந்த யோகியைப் பார்த்து, 'நீங்கள் இந்த இடத்தை விட்டு ஏன் வெளியேறிவிடக் கூடாது?' என்று கேட்டார்.

'இந்த இடத்தை விட்டு வெளியேறிவிட வேண்டும் என்றுதான் நானும் விரும்புகிறேன். ஆனால் இந்த இடத்தை விட்டு வெளியேறத்தான் முடியவில்லை. எத்தனையோ தடவைகள் இந்த இடத்தை விட்டு வெளியேறி விடுவது என்று தீவிரமான முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அவ்வளவு முயற்சிகளும் வீணாகிவிட்டன; விழலுக்கு இறைத்த நீராக முடிந்தன. எந்த முயற்சியுமே பயன்படவில்லை; பலன் தரவில்லை. இந்த இடம் என்னை விடாது; நானும் இதை விடமாட்டேன் போலிருக்கிறது! அப்பப்பா! என்ன கஷ்டம் என்கிறீர்கள்!' என்றான் யோகி.

அதற்குப் பிறகு எங்களுக்குள்ளே மெய்யறிவைப் பற்றிப் பேச்சு எழுந்தது. அவன் சாதனை, உபாசனை முதலியவற்றின் மகத்துவத்தை விஸ்தாரமாக எங்களுக்கு எடுத்துச் சொன்னான். அந்த யோகியின் பேச்சிலிருந்து அவன் மிகவும் சிறந்த அறிவாளி என்பது புலனாகியது. நாங்கள் மணிக்கணக்காக அந்தத் துர்நாற்றத்தைச் சகித்துக்கொண்டு, அறிவாற்றல் நிறைந்த அவனுடைய பேச்சைக் கேட்டு ரசித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது மாலைக் கதிரவன் மலைவாயில் விழத் தொடங்கி விட்டான். செக்கர்வானம் படர்ந்திருந்தது. வான மண்டலம் அப்படி 'செக்கச் செவேல்' என்று சிவந்திருப்பதைக் காணும்பொழுது சந்தியா தேவியை அன்புடன் வரவேற்று உபசரித்து ஹாரத்தி எடுப்பதற்காக, இயற்கையன்னை மஞ்சள் நீர் கரைத்து வைத்திருந்தாளோ, என்று சொல்லத் தோன்றியது.

சந்தியா காலம் நெருங்கி விட்டதைக் கண்ட யோகி திடீரென்று, 'நேரமாகி விட்டது!' என்று உரக்கக் கத்தினான். அடுத்த கணம் 'தடதட' வென்று ஒரே ஓட்டமாக அந்தக் குளத்தை நோக்கி ஓடினான். நாங்களும் உணர்ச்சி மேலிட்டு, வேடிக்கை பார்க்கும் நோக்கத்துடன் அவனைப் பின்தொடர்ந்து ஓடினோம். யோகி பித்தனைப்போல் அந்தக் குளத்தில் குதித்து விட்டான். அவன் குதித்த அடுத்த கணமே அந்தக் குளத்தில் ரத்தத்துக்குப் பதிலாக ஸ்படிகம் போன்ற நிர்மலமான நீர் நிறைந்து எங்களை அளவற்ற வியப்பில் ஆழ்த்தித் திக்குமுக்காடச் செய்துவிட்டது. அதில் நெளிந்து கொண்டிருந்த நரகத்துப் பிராணிகளெனத் தோன்றிய ஜந்துக்கள் அனைத்தும் மறைந்து விட்டன. அவற்றுக்குப் பதிலாக அழகிய தாமரை இலைகளும் புஷ்பங்களும் கண்களுக்குக் குளிர்ச்சியாகக் காட்சி யளிக்கத் தொடங்கின. நாங்கள் ஆச்சரியம் தாளாமல் வாயடைத்துப் போய் நின்றோம். அடுத்த கணம் அந்தக் குளத்தில் யோகியுடன் கூடவே ஒரு பெண்மணியும் நீராடுவதைக் கண்டோம். அந்தப் பெண்மணி வேறு யாரும் இல்லை. சற்றுத் தொலைவில் குடிசையில் பார்த்த அதே பெண்மணிதான் அவள். இருவரும் ஜலக்கிரீடை புரிந்து கொண்டிருந்தார்கள். பெண்மணி தன் முத்துப் போன்ற பல் வரிசைகளை வெளியில் இலேசாகத் தெரியும்படி காட்டிச் சிரித்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் 'அட ஜடங்களே! நின்று நின்று என்ன வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? வாருங்கள், இந்தக் குளத்தில்

நான் பித்தனைப்போல், 'குருதேவா! அதோ, எதிரே பார்த்தீர்களா? குபேரனின் சுமேரு பர்வதத்தை!' என்று மகிழ்ச்சி வெறியில் சற்று உரக்கவே கத்திவிட்டேன். மகாப் பிரபு ரத்னும்பார் என் அறியாமையை எண்ணி நகைத்தார். பிறகு 'அது இமாலய பர்வதம், அப்பா! பனிமீது சூரிய கிரணங்கள் விழுகின்றன. ஆகவே அதைக் கண்ட உனக்குத் தங்கமோ என்ற பிரமை உண்டாகி விட்டது. வேறொன்றுமில்லை' என்று சொல்லி என் பிரமையைத் தீர்த்து வைத்தார். நான் என் அறியாமையை எண்ணி வெட்கித் தலை குனிந்தேன்.

அதற்குப் பிறகு நாங்கள் இன்னும் மேலே சென்றோம். மேலே போகப் போகப் பூமி பனிக் கட்டியினால் மூடப்பட்டிருந்தது. எங்கள் உடல் குளிர் தாளாமல் 'வெட வெட' என்று நடுங்கிக் கொண்டிருந்தது. மகாப் பிரபு ரத்னும்பார் என்னைப் பார்த்து, 'இனிமேல் திரும்பிப் போவோமா?' என்று கேட்டார். நான் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, 'வேண்டாம், மகாப் பிரபு! அதோ பனி உறைந்து மூடியிருக்கிறதே, அந்த மலையின் அடிவாரம் வரை போய் விட்டுத் திரும்புவோம்' என்றேன்.

நாங்கள் இன்னும் சற்றுத் தூரம் சென்றதும் ஒரு குடிசையைக் கண்டோம். அந்தக் குடிசையில் அப்பொழுது ஒரே ஒரு பெண்மணி மட்டும் தனியாக உட்கார்ந்து கொண்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். எங்களைக் கண்டதும் அவள் எழுந்து வந்து கைகூப்பி வணங்கி, 'அதிதிகளின் வரவு நல்வரவு ஆகுக!' என்று சொல்லி அன்புடன் வரவேற்று உபசரித்தாள். மகாப்பிரபு அந்தப் பெண்மணியை நின்று உற்றுக் கவனித்தார். பிறகு அவர் என் அருகில் வந்து காதோடு காதாக, 'இந்த இடம் ஆபத்து நிறைந்ததாகத் தோன்றுகிறது. ஆகவே நாம் திரும்பிப் போய் விடுவதுதான் உசிதம்' என்றார். அந்தப் பெண் நகைத்தாள். 'வயோதிகரான அதிதியின் வாக்கில் உண்மை புதைந்திருக்கிறது. ஆயினும் இவ்வளவு தூரம் வரத்தான் வந்து விட்டீர்களே! இன்னொரு விஷயத்தையும் பார்த்து விட்டுத்தான் போகவேண்டும். உங்கள் வாழ்க்கையில் அப்புறம் அதை ஒரு காலும் மறக்கவே மாட்டீர்கள்!' என்றாள். மகாப் பிரபு என் காதோடு காதாகச் சொன்ன விஷயத்தை அந்தப் பெண்மணி எப்படித்தான் புரிந்து கொண்டாளோ, தெரியவில்லை! அந்தப் பெண்மணி சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும், மகாப்பிரபு பிரமித்துத் திகைத்துத் திக்பிரமை பிடித்தவர் போலானார். ஆனால் அவளுடைய வேண்டுகோளை நிராகரித்துச் செல்லுவது அவருக்கு உசிதமாகத் தோன்றவில்லை. ஆகவே அவளுடைய வேண்டுகோளை மறுக்காமல் நாங்கள் இருவரும் முன்னேறினோம்.



கொஞ்ச தூரம் சென்றதும் 'வெள்ளை வெளேர்' என்றிருந்த தாவள்யமான பனிப் பாறையின் மீது ஒரு யோகி உட்கார்ந்திருப்பதைக் கண்டோம். அவனுடைய ஜடை அவனுடைய கால்கள் வரை வளர்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய விரல் நகங்கள் சிங்கத்தின் நகங்களைப் போலக் கூர்மையாக வளர்ந்திருந்தன. நாங்கள் வரும் திசையையே அவன் கண் கொட்டாமல் கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். நாங்கள் இருவரும் அவன் அருகில் சென்று அவனை வணங்கினோம். அவன் ஆசீர்வதித்து எங்களைத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டான்.

'இன்று எவ்வளவு நாட்கள் கழித்து நான் சதேகம் படைத்த மனிதர்களை இங்கே பார்த்திருக்கிறேன், தெரியுமா?' என்று சொல்லி அவன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அவனுடைய வதனத்தில் தயமும் தாபமும் ஒருங்கே தோய்ந்திருப்பது தெரிய வந்தது.

மகாப் பிரபு அவனைப் பார்த்து, 'ஸ்வாமி! தங்களைப் பார்த்தால் ஏதோ துன்பத்தில் உழலுகிறவர் போலத் தோன்றுகிறதே!' என்றார். 'ஆமாம். நான் துன்பத்தில்தான் உழலுகிறேன். ஆனால் அத்துடன் கூடவே இன்பத்திலும் இழைகிறேன். துன்பத்தில் இன்பத்தை அனுபவிக்கிறேன். இன்பத்தில் துன்பத்தை



இயற்கையின் அந்த எழிலை நாங்கள் கற்பனை செய்துகூடப் பார்த்ததில்லை. பக்கத்துக் காடுகளில் வித விதமான வண்ண மலர்கள் மலர்ந்து குலுங்கின. மலைப் பிரதேசத்து வாடைக் காற்று ஆனந்தமாக மென் மலர்களுடன் கண்ணு மூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. புள்ளினங்கள் இன்னிசை பாடிக் கொண்டிருந்தன. சுற்றுப்புறமும் எங்கு பார்த்தாலும் அமைதி ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது. அங்கே ஆரவாரம் இல்லை; கோலாகலம் இல்லை; ஜனச் சந்தடி இல்லை. ஒரே நிச்சப்தம் மட்டும்தான் நிலவியிருந்தது. மலைத் தொடர்கள் போட்டி போட்டுக் கொண்டு ஒன்றுக்கு மேல் ஒன்று உயரமாக வளர்ந்து மிகவும் மனோரம்யமாகக் காட்சி அளித்துக் கொண்டிருந்தன.

வழி நெடுக ஆங்காங்கே பல கிராமங்கள் இருந்தன. அந்தக் கிராம வாசிகள் அனைவருமே சிவந்த தளிர் மேனி படைத்தவர்கள். அவர்களுடைய பெண்டு பிள்ளைகளும் அழகே உருவெடுத்தவர்களாயிருந்தனர். அவர்கள் விதவிதமான விசித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய ஆடைகள் அணிந்திருந்தனர். அவர்கள் சிரிக்கச் சிரிக்கப் பேசியும், செவிக்கு இனிமையாகப் பாடியும் குதூகலமாகப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தனர். அவர்களிடத்தில் நாணமோ, சங்கோசமோ சிறிதும் தலை காட்டவில்லை.

நானோ வாலிபன். அவர்களுடைய அழகிலே மயங்கி மதியையே பறி கொடுத்து விட்டேன். கும்பல் கும்பலாக அந்தப் பெண்கள் அதி மதுரமாகப் பாடிக்கொண்டு செல்வதைக் கண்ட என் உள்ளம் அவர்களிலேயே லயித்து விட்டது. அவர்கள் பாஷை எனக்குச் சரியாக விளங்கவில்லை. ஆயினும் அவர்களுடைய அந்தப் பாட்டு அர்த்த புஷ்டியுள்ளது; கவி நயம் வாய்ந்தது என்பதை மட்டும் ஒருவாறு உணர்ந்து கொண்டேன். அதுமட்டும் அல்ல; காதல் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு அந்தப் பாடல்கள் பாடப் பெற்றிருக்க வேண்டும் என்பதையும் ஒருவாறு ஊகித்து அறிந்து கொண்டேன். 'இதுதான் அரம்பையர்கள் வாசம் புரியும் ஸ்தலமாக இருக்குமோ?' என்ற கேள்வி என்னை அறியாமலே என் உள்ளத்தில் எழுந்தது.

நாங்கள் இன்னும் சற்று முன்னேறிச் சென்றோம். கிராமங்கள் முன்னைப்போல் கிட்டக் கிட்ட இல்லை; வெகு தூரத்துக்கு வெகு தூரம் சின்னச் சின்ன கிராமங்களாகத்தான் தென்பட்டன. குளிரோ வர வர அதிகமாகி விட்டது. புஷ்ப வகைகளும் பழ வகைகளும் மிகக் குறைவாகவே தான் கிடைத்தன.

ஒருநாள் காலை எழுந்ததும் எழுந்திராததுமாக நாங்கள் கூப்பிடு தூரத்தில் இருந்த பொன்மயமான பர்வதம் ஒன்றைக் கண்டோம். அதைக் கண்டதுதான் தாமதம்,



“தாராளமாகச் சொல்லுகிறேன்” என்று ஆரம்பித்தான் பீஜருப்தன்.

“இட்டத் தட்டப் பத்து வருஷமிருக்கலாம். அந்த நாட்களில் நான் கல்வி பயின்று கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு சமயம் நான் என் குருநாதர் மகாப் பிரபு ரத்னாம்பாருடன் தேச யாத்திரைக்குச் சென்றேன். பெரிய பெரிய நகரங்களையும் வன வனாந்திரங்களையும் தாண்டிக் கொண்டு நாங்கள் இருவரும் கங்கைக் கரை ஓரமாகக் கால் நடையாகவே ஹரித்வாரத்தை அடைந்தோம். அங்கே சமதளமான பூமி முடிவடைந்து விட்டது. வானளாவத் தலை நிமிர்த்து நின்ற பர்வத சிகரங்கள் எங்கள் கண்ணெதிரே கம்பீரமாகத் தோற்றமளித்தன. நான் மகாப் பிரபு ரத்னாம்பாரைப் பார்த்து, ‘ஸ்வாமி! இன்னும் மேலே என்ன இருக்கிறது?’ என்று கேட்டேன். அதற்கு அவர் ‘அறிவுக்கு எட்டாத பிரதேசம்’ என்று ரத்தினச் சுருக்கமாகப் பதில் அளித்தார்.

பக்கத்திலே கங்கைக் கரையோரமாக ஒரு மனிதன் உட்கார்ந்திருந்தான். அவன் மகாப் பிரபு ரத்னாம்பார் சொன்னதை ஒரு வேளை கேட்டு விட்டானோ என்னவோ, தெரியவில்லை! ‘என்ன சொன்னீர்கள்? மேலே அறிவுக்கு எட்டாத பிரதேசம் இருக்கிறது என்றுதானே? ஆம், தாங்கள் சொல்லுவது ஒரு விதத்தில் சரிதான். ஆனால் ஒரு விஷயம். அதைச் சொல்ல வேண்டியது என் கடமை என்றெண்ணிச் சொல்லுகிறேன். அறிவுக்கு எட்டாத இடம் என்று சொன்னீர்களே, அதுதான் தேவதைகள் வாசம் புரியும் இடம். இதே மலைப் பிரதேசத்தில்தான் கைலாச பர்வதம் இருக்கிறது. இந்த மலைப்பாங்கான பிரதேசத்தில்தான் கந்தர்வர்கள் நடமாடுகின்றனர். அரம்பையர்கள் கேளிக்கிரீடை புரிகின்றனர்’ என்றான்.

அவன் சொன்னதைக் கேட்ட மகாப் பிரபு ரத்னாம்பாரின் முகத்தில் அவநம்பிக்கையின் அறிகுறி தாண்டவமாடியது. இலேசாக இளநகை புரிந்தார். ஆனால் அநுபவ ஞானமே அற்ற வாலிபனான எனக்கு அவனுடைய அந்தக் கற்பனையில் அவநம்பிக்கை உதிக்கவில்லை. ‘ஒரு வேளை இவர் சொல்லுவது போலவே இருக்கலாம் அல்லவா? ஏன், மகாப்பிரபு! இந்த மலைகளைத் தாண்டி அந்த மலைப் பிராந்தியத்துக்குப் போய்வருவதில் யாதொருவிதமான ஆபத்தும் இல்லையே!’’ என்று கேட்டேன்.

‘ஒரு ஆபத்தும் இல்லை. உனக்குப் போகவேண்டும் என்று இருந்தால், வா! போய்ச் சுற்றி வருவோம்’ என்றார் என் குருநாதர் மகாப்பிரபு ரத்னாம்பார். நாங்கள் இருவரும் இன்னும் மேலே சென்றோம்.

# சித்திரலேகா

ஸ்ரீ பகவதி சரண் வர்மா

பதினெட்டாம் அத்தியாயம்

## கடவுள் காப்பாற்றினார்!

இருட்டியதும் பீஜகுப்தன் சுவேதாங்கனை அழைத்துக் கொண்டு மிருத்யுஞ்ஜயரின் மாளிகைக்குச் சென்றான். அன்று மிருத்யுஞ்ஜயரின் மாளிகையிலே முதல் நாள் இரவைப் போன்ற ஆடம்பரமான அலங்காரங்கள் ஒன்றும் இல்லை. அந்த மாளிகையின் சூழ்நிலை சாந்தமே உருவெடுத்ததாக அமைந்திருந்தது. மிருத்யுஞ்ஜயர் எழுந்து பீஜகுப்தனை வரவேற்றார். பிறகு அவர்கள் எல்லோரும் இளைப்பாறும் மண்டபத்துக்குச் சென்று உட்கார்ந்தனர். யசோதரா முன்னாலேயே சென்று அவர்களுடைய வரவை எதிர்பார்த்த வண்ணம், அங்கே உட்கார்ந்திருந்தாள்.

"பீஜகுப்தா! அந்தக் கடிதம் அனுப்பியிருக்க வேண்டிய அவசியமே இல்லை" என்று மிருத்யுஞ்ஜயர் பேச்சை ஆரம்பித்தார்.

"ஸ்வாமி! தன்னுடைய தவறை ஒப்புக் கொண்டு சீர்திருத்திக் கொள்ளவேண்டியது ஒவ்வொரு மனிதனுடைய கடமையும் ஆகும்" என்றான் பீஜகுப்தன்.

மிருத்யுஞ்ஜயர் சிரித்துக் கொண்டே, "உன் ஊழியன் சுவேதாங்கன் என் குருகுல வாசத்துத் தோழனான விசுவபதியின் பிள்ளை என்பதை இன்றுதான் தெரிந்து கொண்டேன்" என்று சொல்லிச் சுவேதாங்கனை ஒருமுறை பார்த்தார்.

"ஆனால் ஸ்வாமி! சுவேதாங்கன் என் ஊழியன் அல்ல; என் குருவின் சிஷ்யன். ஆகவே அவன் எனக்குக் கூடப் பிறந்த சகோதரனைப்போல" என்று சொன்னான் பீஜகுப்தன்.

"பீஜகுப்தா! இன்று நீ வரச் சிறிது நேரம் ஆகிவிட்டதே, ஏன்?" என்று கேட்டார் மிருத்யுஞ்ஜயர்.

"ஆமாம், இன்று காசியிலிருந்து அதிதிகள் வந்திருந்தார்கள். அதனால்தான் சிறிது நேரம் ஆகிவிட்டது" என்று பதில் அளித்தான் பீஜகுப்தன்.

"காசி அழகு வாய்ந்த மிகப் புராதனமான நகரம் அல்லவா? நீங்கள் எப்பொழுதாவது காசி போயிருக்கிறீர்களா?" என்று கேட்டாள் யசோதரா.

பீஜகுப்தன் இலேசாகச் சிரித்தான். "என் வாழ்க்கையில் பெரும் பகுதி காசியில்தான் கழிந்தது. என்னுடைய குரு மகாப்பிரபு ரத்னாம்பரர் முன்பு காசியில்தான் வசித்து வந்தார். யசோதரா தேவி! காசி இங்கிருந்து வெகு சமீபத்தில் தானே இருக்கிறது. நான் காசி மட்டும் அல்ல; பாரத நாட்டின் பற்பல இடங்களுக்கும் சென்று சுற்றிப் பார்த்திருக்கிறேன். எனக்கு யாத்திரை போவதென்றால் பரம சந்தோஷம்" என்றான்.

"அப்படியானால் நீங்கள் இமாலய பர்வதத்தையும் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டாள் யசோதரா.

"இமாலயம், விந்தியம் முதலிய பர்வதங்களை யெல்லாம் நான் பார்த்திருக்கிறேன். இயற்கையின் எழிலைப் பார்த்து அனுபவிக்க வேண்டுமென்றால், மலைப்பிரதேசங்களைக் காட்டிலும் மேலான இடம் கிடைக்காது என்பது என் கருத்து" என்றான் பீஜகுப்தன். பிறகு மிருத்யுஞ்ஜயர் பக்கம் திரும்பி, "ஸ்வாமி! எத்தனையோ ஆச்சரியமான விஷயங்களை யெல்லாம் நான் அங்கே பார்த்திருக்கிறேன். ஆனால் ஒரேயொரு சம்பவத்தை மட்டும் என்றைக்குமே மறக்க முடியாது. அது என் நினைவுத் திரையில் அப்படி அழுந்திப் போயிருக்கிறது. அதைக் கேட்டாலே எல்லை மீறிய வியப்பு உண்டாகும்" என்றான்.

யசோதரா ஆவலை அடக்க மாட்டாமல், "தயவு செய்து அந்தச் சம்பவத்தைச் சொல்ல முடியுமா?" என்று கேட்டாள்.

திண்டிவனம்; 2. ஸ்ரீ ஆர். கனகசபைப் பிள்ளை, பார்லிமெண்ட் அங்கத்தினர், நகரசபைத் தலைவர், சிதம்பரம்.

வட ஆற்காடு: 1. ஸ்ரீ ஆர். ராமச்சந்திர ரெட்டியார், வட ஆற்காடு ஜில்லா போர்டு தலைவர், வேலூர்; 2. ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை, எம். எல். ஏ., பெரிய தெரு, திருவண்ணாமலை.

தஞ்சாவூர்: 1. ஸ்ரீ வி. நாடிமுத்துப் பிள்ளை, தஞ்சாவூர் ஜில்லா போர்டு தலைவர், பட்டுக்கோட்டை; 2. ஸ்ரீ வி. எஸ். தியாகராஜ முதலியார், எம். ஏ., திருவாரூர்; 3. ஸ்ரீ ஏ. கிருஷ்ணசாமி வாண்டையார் எம். எல். ஏ., பூண்டி.

திருச்சிராப்பள்ளி: 1. ஸ்ரீ எம். எஸ். ரங்கசாமி, ஆடிட்டர், தென்னூர், திருச்சிராப்பள்ளி; 2. ஸ்ரீ எல். என். எஸ். மணி, மானேஜிங் டைரக்டர், திருநிதி பாங்க் லிமிடெட், திருச்சிராப்பள்ளி; 3 டாக்டர் எட்வர்டு பால் மதுரம், நகர சபைத் தலைவர், புத்தூர், திருச்சிராப்பள்ளி.

மதுரை: 1. டாக்டர் டி. கே. ராமா, நகர சபைத் தலைவர், மதுரை; 2. ஸ்ரீ டி. எஸ். ராஜம், டி. வி. எஸ். அண்டு சன்ஸ் லிமிடெட், மதுரை.

ராமநாதபுரம்: 1. ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி நாயுடு, மாகாணக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர், ஸ்ரீ வில்லிப்புத்தூர்; 2. ஸ்ரீ ஏ.ஆர். ஏ.ஆர். எம். சொக்கலிங்கம் செட்டியார், நகர சபைத்தலைவர், காரைக்குடி; 3. ஸ்ரீ எஸ். ஓ. எஸ். பி. உடையப்பா ராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர், மதுரை.

திருநெல்வேலி: 1. ஸ்ரீ டி. எஸ். ஆதிமூலம், திருநெல்வேலி ஜில்லா போர்டு தலைவர், மூக்கூடல்; 2. ஸ்ரீ எம். வி. எஸ். சுந்தரவேல் நாடார், நகர சபைத் தலைவர், தூத்துக்குடி.

சேலம்: 1. ஸ்ரீ கே. எஸ். சுப்ரமணியக் கவுண்டர், சேலம் ஜில்லா போர்டு தலைவர், சேலம்; 2. ஸ்ரீ வி. எல். நரசு, நரசு காப்பி ஒர்க்ஸ், சேலம்.

கோயமுத்தூர்: 1. ஸ்ரீ வி. கே. பழனிசாமிக் கவுண்டர், கோயமுத்தூர் ஜில்லா போர்டு தலைவர், பொள்ளாச்சி; 2. ஸ்ரீ கே. சுப்ரமணியம் எம். எல். ஏ., (சுப்ரி) கோயமுத்தூர்; 3. ஸ்ரீ சி. சுப்ரமணியம், பார்லிமெண்டு அங்கத்தினர், கோயமுத்தூர்; 4. ஸ்ரீ ஜி. கே. சுந்தரம், மானேஜிங் ஏஜெண்டு, தி காட்டன் மில்ஸ் லிமிடெட், சிங்காநல்லூர்.

நீலகிரி: 1. ஸ்ரீ என். லிங்கன், பி. ஏ. பி. எல். நகர சபைத் தலைவர், உதகமண்டலம்; 2 ஸ்ரீ என். எம். லிங்கம் பி. ஏ., ஜில்லா போர்டு தலைவர், உதகமண்டலம்.

அந்தந்த ஜில்லாவில் மகாத்மா ஸ்தூபி நிதி சேர்க்கும் பணியில் உதவி செய்ய விரும்புகிறவர்கள் மேற்கண்ட பிரமுகர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம்.



# கடற்கரையில் ஒரு ஜோதி



ஜனவரி மாதம் 26-ந் தேதி குடியரசு ஸ்தாபன தினத்தன்று பாபு ராஜேந்திர பிரசாத் காலையில் எழுந்ததும் யமுனைக் கரையில் ராஜ கட்டத்துக்குச் சென்று மகாத்மாவின் சமாதிக்குப் புஷ்பஹாரம் சூட்டிப் பிரார்த்தனை செய்து விட்டுத் திரும்பினார். பிறகுதான் குடியரசு அக்கிராசனர் பதவியை ஏற்றுக் கொள்ளும் வைபவத்துக்குச் சென்றார்.

30-ந் தேதி காந்திஜி அமரரான தினத்தில் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத், பிரதம மந்திரி ஜவாஹர்லால், ஸர்தார் வல்லபாய் படேல் முதலியவர்கள் அதிகாலையில் ராஜ கட்டத்துக்குச் சென்று மகாத்மா சமாதிக்குப் புஷ்ப ஹாரங்களைச் சூட்டி வணங்கினார்கள். பிறகு மற்றக் காரியங்களைக் கவனித்தார்கள்.

கல்கத்தாவில் குடியரசு ஸ்தாபன தினத்தன்று அதிகாலையில் கவர்னர் கைலாசநாத் காட்ஜு கல்கத்தாவிலிருந்து பதினெட்டு மைல் தூரத்தில் ஹூக்ளி நதிக்கரையில் அமைந்துள்ள மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபியை அடைந்து புஷ்ப ஹாரம் சமர்ப்பித்துப் பிரார்த்தனை செய்துவிட்டு வந்தார். பிறகு, இந்தியக் குடியரசின் கீழ் கவர்னர் பதவி ஏற்கும் பிரமாணத்தைச் செய்தார். மேற்கு வங்காள மந்திரிகளும் கவர்னரைப் பின்பற்றினார்கள்.

30-ந் தேதி காலையிலும் கவர்னர் கைலாசநாத் காட்ஜு அவர்கள் முதற் காரியமாக மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபியை அடைந்து வணங்கிப் பிரார்த்தனை செலுத்திவிட்டு வந்தார்.

இம்மாதிரி தேசிய மகிமை பொருந்திய புண்ணிய தினங்களில் பிரமுகர்களும் பொது ஜனங்களும் சென்று தேசத்தின் பிதாவுக்கு மரியாதை செலுத்திவிட்டு வருவதற்குரிய சின்னம் ஒன்று சென்னையிலும் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அத்தகைய சின்னத்தை அமைப்பதற்கு உலகத்திலேயே அழகிற் சிறந்த கடற்கரைகளில் ஒன்றான சென்னைக் கடற்கரையைப் போல் தகுந்த இடம் வேறு எது இருக்க முடியும்?

சென்னை நகரத்தில் வசிப்பவர்கள் சௌகரியப் பட்டபோது கடற்கரையில் சர்வ கலாசாலைக் கட்டிடங்களுக்கு எதிரே சென்று நின்று பாருங்கள். அங்கே மகாத்மாவின் ஞாபகார்த்தமாக ஒரு கம்பீரமான ஸ்தூபம் எழுந்து நின்றால், அது சென்னைக் கடற்கரையை இன்னும் எவ்வளவு மகிமையுள்ளதாக்கும்? சென்னை நகரத்துக்கே ஒரு புனித அலங்காரமாக விளங்குமல்லவா? அத்தகைய ஞாபகார்த்த ஸ்தூபியின் உச்சியில் ஏற்றும் தீபம் சென்னை மாகாணத்துக்கே ஒளி தரும் ஒரு அமர ஜோதியாக விளங்குமல்லவா?

சுதந்திரத் திருநாள், குடியரசுத் திருவிழா, காந்தி ஜயந்தி ஆகிய நாட்களில் பொது ஜனங்களும் பொதுஜனத் தலைவர்களும் சென்று புஷ்ப ஹாரங்களைச் சமர்ப்பித்துத் தேசத்தின் தந்தைக்குத் தங்கள் பக்தியைச் செலுத்துவதற்குத் தகுந்த புனித க்ஷேத்திரமாக மகாத்மா ஸ்தூபி விளங்குமல்லவா?

சென்னை நகருக்கும் சென்னை மாகாணத்துக்கும் மகாத்மாவின் மகோந்நதத்துக்கும் பெருமை தருவதாக அத்தகைய ஸ்தூபியை அமைப்பதற்கு மூன்று லட்சம் ரூபாய் தேவையாயிருக்கும் என்று சென்னை சர்க்காரின் கட்டிட நிபுணர் மதிப்பிட்டிருக்கிறார். சென்னை மாகாணத்துக்கே பொதுவான ஞாபகச் சின்னமாக விளங்கப் போகும் இந்தத் திருப்பணிக்குச் சென்னை நகரவாசிகள் மட்டுமன்றி மாகாணத்தில் வசிப்பவர்கள் அனைவரும் உதவி செய்யவேண்டும்.

தமிழ் நாட்டைச் சேர்ந்த மாவட்டங்களில் மகாத்மா ஸ்தூபி நிதிக்கு நன்கொடை வசூல் செய்வதற்குப் பின்வரும் பிரமுகர்களை ஸ்தூபி நிதிக் கமிட்டியார் ஏற்படுத்தி யிருக்கிறார்கள் :—

செங்கற்பட்டு : 1. ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார், செங்கற்பட்டு ஜில்லா போர்டு தலைவர், சைதாப்பேட்டை, சென்னை; 2. ஸ்ரீ எம். சேஷாச்சாரியார், அட்வகேட், பூந்தமல்லி.

தென் ஆற்காடு : 1. ஸ்ரீ வெங்கட கிருஷ்ண ரெட்டியார் எம். எல். ஏ.,

லயமாக, நவகாளி அட்டூழியத்தைச் சித்தரிக்கும் ஓவியம், நம் கண்முன்னே பயங்கரத்தைக் காட்டி நம் மனதில் கலக்கத்தை எழுப்புகின்றது. அன்று நடந்த அட்டூழியத்தினிடையே அன்புப் போர் நடத்திய அண்ணல் காந்தியும் நம் கண் முன்னே தோன்றுகிறார்.

''காதறுக் கள்ளன்'' கதையைப் படித்தவுடன் "ஆசிரியர் ஏன் அவசரப் பட்டுக் கொண்டு, அழகான கதையை முக்கால் வாசி கேட்டு விட்டு வந்திருக்கிறார்" என்றுதான் தோன்றியது! அந்தக் கார் இன்னும் சற்று நேரம் மணலில் பதிந்திருந்தால் அந்தக் கால்வாசியும் நமக்குக் கிடைத்திருக்குமே?

செம்மங்குடி
28—1—50 என். குஞ்சிதபாதம்.

★

'கல்கி' குடியரசு மலரைக் கையில் பெற்றவுடன் மிகவும் மகிழ்ச்சியுற்றேன். இதற்கு முன் கல்கியின் தீபாவளி மலர், பொங்கல் மலர் போன்றவைகளின் விலை நான்கு ரூபாய், மூன்று ரூபாய் என்று நிர்ணயிக்கப் பட்டிருந்தது. நான் 'கல்கி'யின் மலர்களைப் பார்க்க மிக ஆர்வமுள்ளவன். ஆனால் ரூபாய் நான்கோ, மூன்றோ கொடுத்து வாங்கச் சக்தியில்லாதவனாயிருந்தேன்.

தேவர்கள் நமக்குக் குடியரசைத் தந்தார்கள். கல்கியின் ஆசிரியராகிய தாங்கள் எங்களுக்கு அத்தினத்தன்று குடியரசு மலரைச் சமர்ப்பித்தீர்கள். நாம் ஒவ்வொருவரும் சுதந்திரமாக வாழ அனுமதி பெற்றது போல், நானும் என்னுடைய நண்பர்களும் 'கல்கி' மலரைச் சுதந்திரமாகப் பெற வேண்டுமென்ற முறையில் மலரின் விலையைத் தாங்கள் ரூபாய் ஒன்று என்று குறித்ததைப் பார்த்தவுடன் நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

தேவகோட்டை
28—1—50 ந. ராமசாமி

# குடியரசுக் கொண்டாட்டம்

கொழும்பு, ஜனவரி 28.

பாரத தேசம் பரிபூரண சுதந்திரக் குடியரசாகிய புனித சம்பவத்தை இலங்கை வெகு விமரிசையாகவும் விசேஷ தீபாலங்காரங்களுடனும் கொண்டாடியது. இந்தியர்கள் தங்கள் இல்லங்களையும் தொழில் ஸ்தாபனங்களையும் தேஜோமயமாகச் சிங்காரித்து மூவர்ண அசோக சக்கரக் கொடிகளை கம்பீரமாகப் பறக்க விட்டிருந்தனர். காலை எட்டு மணிக்கு ஹை கமிஷனர் ஸ்ரீ தமது வாசஸ்தலத்தில் நகரப் பிரமுகர்கள் முன்னிலையில் தேசியக் கொடியை ஆரோகணம் செய்து வைத்ததிலிருந்து விழா ஆரம்பமாயிற்று. மாலையில் கால்பேஸ் கடற்கரையில் நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்துக்கு சகல வகுப்பினரும் விஜயம் செய்து இந்தியக் குடியரசுக்கு நல்வாழ்த்து அனுப்புவதில் பங்கு எடுத்துக் கொண்டார்கள். இந்தக் கூட்டத்தில் ஸ்தல ஸ்தாபன சுகாதார இலாகா மந்திரியும் இலங்கை மந்திரி சபையிலே சர்வ தேசிய மனோபாவம் படைத்தவருமான ஸ்ரீ பண்டாரநாயகா உணர்ச்சி ததும்பப் பேசினார். "இந்தச் சம்பவம் இந்தியாவுக்கு மட்டுமல்ல, அகில உலகத்துக்குமே விசேஷமானது. பரம ஏழைகள் உட்பட பல்லாயிரக் கணக்கான பாரதப் புதல்வர்களின் பெரும் தியாகங்களே இன்று இந்தியாவை ஒரு சுதந்திரக் குடியரசாக்கியுள்ளது. உலகத்தை உய்ய வைக்கும் தலைவர்களை கண்ட காலங்களிலெல்லாம் தோற்றுவித்த பாரத பூமி ஜன சமுதாயத்தின் தற்போதைய தொல்லைகளை நிவர்த்திக்க மற்றொரு மாபெரும் தலைவரைத் தோற்றுவிக்கும் தருணம் வந்துவிட்டதென்றார். இந்தியாவுக்கும் இலங்கைக்கும் மிடையிலுள்ள வேற்றுமைகளைப் போக்கி சௌஜன்யம் நிலவச் செய்ய தமது சக்திக்கு இயன்ற மட்டில் பாடுபடுவதாயும் அவர் உறுதி கூறினார்.

இரவில் கால்பேஸ் ஹோட்டலில் நடந்த ஒரு விருந்துபசாரத்தில் பிரதம மந்திரி சேனாநாயகா வழக்கம்போல் அருமையாகப் பேசினார். சரித்திர காலத்துக்கு முன்பிருந்தே இலங்கைக்கும் இந்தியாவுக்கு மிடையில் கலாசார, மத, தேசத் தொடர்புகள் இருந்து வருவதாயும் சமீபத்தில் நேருஜீ இங்கு வந்தபொழுது அவரிடம் இலங்கை மக்கள் அன்பைச் சொரிந்தது இந்தியாவிடம் இலங்கைக்கு இருக்கும் வாத்ஸல்யத்தைப் பிரதிபலிக்கிறதென்றும் கூறினார். கண்டியில் நடந்த குடியரசு தினவிழாவில் மேயர் ஸ்ரீ இ. எல். சேனாநாயகா பேசிய பொழுது "சிங்களவர்களெனப் படும் நாங்களும் இந்தியர்கள்தான். நாங்கள் இலங்கைக்குக் கொஞ்சம் முன்பு வந்தோம். நீங்கள் கொஞ்சம் பிந்தி வந்தீர்கள். அவ்வளவுதான் வித்தியாசம்!" என்று சொன்னார். —ஜவி.

# 'கல்கி' குடியரசு மலர் 

மலரைத் திறந்ததும் முதன் முதலில் என் கண்களில் காட்சி தந்தது 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என்ற பகுதி. என்னை யறியாமலே என் தலையையும் தடவிப் பார்த்தது என் கை! அங்கு கிரீடம் இல்லை! ஆனால் தொப்பிதான் இருந்தது!! உள்ளக்கிளர்ச்சியுடன் வேகமாகப் புரட்டினேன். சிறந்த கருத்துகள் நிறைந்த கதைகளும், கட்டுரைகளும், மணியத்தின் ஓவியமும் மனதை விட்டு இன்னும் அகலவில்லை. புதுப் புது அம்சங்களைச் சேர்த்து மலரை அழகுபடுத்தி மக்களைத் திணறச் செய்து விட்டீர்கள்! இவ்வளவு சிறந்தமுறையில் வேறு யாரும் குடியரசுத் தினத்தை மக்களுக்கு ஞாபகமூட்டவில்லை என்று திண்ணமாய்க் கூறுவேன். இதை மற்றவர்களும் ஆமோதிப்பார்கள் என்று நம்புகிறேன்.

கல்கத்தா
29—1—50 — வை. கிருஷ்ணன்.

★

சென்ற இரண்டு மூன்று ஆண்டுகளாகக் 'கல்கி' தீபாவளி மலர் வெளியிடாத குறையைக் 'குடியரசு மலர்' மூலம் தீர்த்து விட்டீர்கள். அளவில் சிறியதே ஆனாலும், அம்சங்கள் யாவும் நிறைந்து சிறந்து விளங்குகிறது.

ராஜாஜி அவர்களின் பொன் மொழிகளுடன் தொடங்கும் மலரில், மந்திரி கனம் பக்தவத்ஸலம் அவர்களும், நாமக்கல் கவிஞரும் 'குடியரசு' தத்துவத்தைத் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். அனைவரும் படித்து, அதன்படி நடந்து கொள்ள வேண்டியபடி அவை அமைந்திருக்கின்றன. டி. கே. சி. அவர்களுடைய கட்டுரையும், 'ஆட்சி'யின் அவசியத்தை விளக்குகிறது. 'சுந்தர'வின் இந்து தேச சரித்திரச் சுருக்கம் பயனுள்ள கட்டுரை.

'டைரக்டர் டமாரம்' சிரிக்கச் சிரிக்கப் பேட்டி யளிக்கிறார். கி. ரா. கோபாலன் த. நா. குமாரசுவாமி, எஸ். வி. எஸ்., லோமாஸ், துரோணன், துஷ்யந்தன் முதலியவர்களுடைய கதைகளும் நன்கு அமைந்திருக்கின்றன.

கதைகள், கட்டுரைகள் யாவும் ரசமாக இருப்பதுடன் கருத்துக்களுடன் கூடி விளங்குவதே இந்த மலரின் சிறப்புக்கு முக்கிய காரணம். இவற்றுடன் நான்கு வர்ணப் படங்களும் சேர்ந்து கொம்மாள மிடுகின்றன. 'நவகாளி யாத்திரை'—ஒரு சித்திரமே போதும் மலரின் விலைக்கு. 'ஒளி படைத்த கண்ணினாய்' படமோ மலரின் மதிப்பை அதிகரித்திருக்கிறது. மற்ற ஹாஸ்ய சித்திரங்களும், கார்ட்டூன்களும் பேஷாய் அமைந்து விட்டன.

'குடியரசு மல'ரின் வெற்றியில் நானும் கலந்து கொண்டு வாழ்த்துக் கூற விரும்புகிறேன்.

கல்யாண்
28—1—50 — வி. எஸ். சுந்தரராஜன்.

★

உங்கள் குடியரசு மலரைப் பார்க்கும் ஒவ்வொருவரையும் அதன் அட்டை மீதுள்ள மலர்ந்த முகம் புன்முறுவலோடு வரவேற்கிறது. அருகில் உள்ள அசோகஸ்தூபி அதை அவசியம் படிக்க வேண்டும் என்று கட்டளையிடுவது போல் மூன்று சிங்கங்களைக் கொண்டு நிற்கிறது. அதன் உள்ளிருக்கும் படம் மாதாவை மலர் கொண்டு பணிய வேண்டும் என்று கட்டளை போடுகிறது. அறியாமைக்கு அடிமையான மக்களைச் சங்கநாதம் செய்து எழுப்புகிறது வேறு ஒரு படம்.

இந்தியா குடியரசு பெற்ற தினத்தில் அமெரிக்காவின் சில படங்கள் ஆங்காங்கே வெளியிட்டிருப்பது மிகவும் நன்ருய் இருக்கிறது. அமெரிக்காவைப்போல் நம் நாடும் செல்வமுள்ள நாடாக வேண்டும் என்று கடவுளை வணங்குவோமாக.

நவகாளி யாத்திரை மிகவும் முக்கியமானது. மகாத்மா நம்முடன் பூத உடலில் இல்லையென்றாலும் ஞான உடலுடன் நம்முடன் இருக்கிறார். அவரைப் பின்பற்றி நடக்க வேண்டும்.

இந்த அருமையான மலரை அளித்ததற்கு உங்களுக்கு என் சார்பாகவும் இதை படிக்கும் எல்லோரின் சார்பாகவும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை
28—1—50 — வெங்கடசுப்பையா

★

'கல்கி' குடியரசு மலர் பார்த்தேன். ராஜாஜி அவர்களின் உயர்ந்த கருத்துக்கள் அடங்கிய சுருக்கமான கட்டுரை, ஆஸ்தான கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளையின், 'நமது குடியரசு' என்ற அழகான கட்டுரை இன்னும் தேசிக விநாயகம் பிள்ளை, காட்டூர் கண்ணன், சுத்தானந்த பாரதி ஆகியோர்களின் உயரிய கவிதைகள், இதுகாறும் நமக்குப் பழக்கப் பட்ட எழுத்தாளர்களின் கற்பனை மிகுந்த கதைகள், ஆகியவைகளெல்லாம் சேர்ந்து மலருக்கு நல்ல முறையிலே, மணத்தை ஊட்டுகின்றன.

இத்துடன் இடையிடையே கண்ணைக் கவரும் பல வர்ண ஓவியங்கள், மலரின் வண்ணப் பகட்டாக அமைகின்றன. முக்

"ஒரு ஆட்சேபமும் இல்லை" என்று சொன்னார் மகாத்மா.

"கூட்டினால் நீங்களும் அதில் கலந்து கொள்வீர்கள் அல்லவா?"

"தனிப்பட்ட முறையில் பேஷாகக் கலந்து கொள்வேன். ஒரு நிபந்தனையும் போடாமல் வட்டமேஜை மகாநாட்டுக்கு வர நான் தயார். அது போலவே என்னிடமும் நிபந்தனை எதுவும் கேட்கக் கூடாது" என்றார் மகாத்மா.

இந்தப் பதில் ஜம்னாதாஸுக்கும் ஜின்னாவுக்கும் மகிழ்ச்சி அளித்தது. "மகாத்மா காந்தி வட்ட மேஜை மகாநாட்டுக்கு வரச் சம்மதித்து விட்டார். வேறு என்ன வேண்டும்?" என்ற மனத் திருப்தியுடன் அவர்கள் கல்கத்தாவுக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

அவர்கள் புறப்பட்டுச் சென்றவுடனே காந்தி மகாத்மா பண்டித மாளவியாவின் கல்கத்தா விலாசத்துக்கு ஒரு தந்தி அடித்தார். அது வருமாறு:—

சபர்மதி
19—12—21

*ஜம்னாதாஸையும் ஜின்னாவையும் பார்த்துப் பேசினேன். தயவு செய்து அடக்கு முறையைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அரசாங்கத்தார் உண்மையிலேயே மனமாறுதல் பெற்று பஞ்சாப், கிலாபத், சுயராஜ்ய பிரச்னைகளைத் தீர்த்து வைக்கக் கவலை கொண்டாலன்றி வட்ட மேஜை மகாநாட்டினால் பயன் ஒன்றும் விளையாது.*

*காந்தி.*

பண்டித மதன்மோகன் மாளவியாவிடம் மகாத்மாவுக்கு மிக்க மதிப்பு உண்டு; பக்தியும் உண்டு. மாளவியா தேச விடுதலைக்கு விரோதமாகப் பிரிட்டிஷாரோடு சேர்ந்து விடுவார் என்ற எண்ணம் மகாத்மாவுக்கு அணுவளவும் இல்லை. ஆனால் தேசமெங்கும் பெரிய பெரிய தலைவர்கள், — நேரு, தாஸ் போன்றவர்கள் — சிறை புகுந்ததினால் மாளவியாவின் மனம் கனிந்திருந்தது என்பது மகாத்மாவுக்குத் தெரிந்திருந்தது. "ஐயோ! இப்பேர்ப்பட்ட பிரமுகர்கள் எல்லாரும் சிறைக்குப் போகிறார்களே?" என்ற கவலையினால், மாளவியாஜீ இந்த மத்தியஸ்த முயற்சியில் தலையிட்டிருக்கிறார் என்று காந்தி மகாத்மா நம்பினார்.

ஆனால் சத்தியாக்கிரஹ இயக்கத்தின் பெருமையே நேரு, தாஸ் போன்றவர்கள் சிறைக்குச் சென்றதுதான். அதனாலேயே சத்தியாக்கிரஹ இயக்கம் தேசத்தில் அளவிலாத பலம் பெற்று வந்தது. சிறைக்குச் சென்ற தலைவர்களும் தங்களுடைய தியாகத்தைக் குறித்து எல்லையற்ற பெருமிதத்தோடுதான் இருப்பார்கள். சிறைக் கஷ்டங்களைக் கண்டு அவர்கள் சலித்துவிட மாட்டார்கள். புடம்போட்ட தங்கத்தைப் போல் சிறைக் கஷ்டங்களினால் அவர்களுடைய ஆத்ம சக்தி மேலும் பிரகாசத்தை அடையும்.—இத்தகைய கொள்கைகளில் நிலைபெற்ற காந்தி மகான் பண்டித மாளவியாவின் மனக்கவலையைத் தீர்க்கும் பொருட்டே "அடக்கு முறையைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம்" என்று தந்தி கொடுத்தார்.

மகாத்மா காந்தி மாளவியாவுக்குத் தந்தி அடித்த அதே 19-ந் தேதி கல்கத்தாவிலிருந்து மகாத்மாவுக்கு இன்னொரு தந்தி வந்தது. அது சிறைக்குள்ளிருந்த தேசபந்து தாஸ், மௌலானா ஆஸாத் இருவரும் கையொப்பமிட்டு வந்தது. அந்தத் தந்தியில் கண்ட விஷயம் மகாத்மாவின் மனதை உண்மையாகவே திடுக்கிடச் செய்து விட்டது. தாஸ் — ஆஸாத் தந்தியில் கண்ட விஷயம் என்ன வென்பதை அடுத்த பகுதியில் பார்க்கலாம்.

## திருமணம்



பிரபல ஆடிட்டர் ஸ்ரீ டி. எஸ். நாராயண ஐயர் அவர்களின் குமாரி லலிதாவுக்கும், ஸ்ரீ சிவராமகிருஷ்ணன் அவர்களுக்கும் சென்னை, தியாகராயநகரில் சென்ற வாரம் திருமணம் சிறப்பாக நடந்தது. ஆஸ்தான கவிஞர் ராமலிங்கம் பிள்ளை யவர்களும் இன்னும் பல பிரமுகர்களும் விவாகத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்தனர். ராஜாஜி அவர்களிடமிருந்து வாழ்த்துச் செய்தி வந்திருந்தது.

காட்டில் "ஒன்றும் செய்ய முடியாது" என்று கையை விரித்துவிடக்கூடும் அல்லவா? அப்படித்தான் நடக்கும் என்று மகாத்மாவின் அந்தராத்மா அறிவுறுத்தியது. ஏனெனில், ரெடிங் சர்க்கார் உண்மையிலேயே மனம் மாறி சமரசத்துக்கு வர வேண்டிய அளவுக்குத் தேசத்தில் இயக்கம் இன்னும் பலம் பெறவில்லை என்று மகாத்மா கருதினார். அப்படிச் சர்க்கார் இறங்கி வருவதற்கு மேலும் தீவிர இயக்கம் நடத்தியாக வேண்டும். பொது மக்கள் அதில் ஏராளமாகப் பங்கு எடுத்துக் கொள்ளவும் வேண்டும்.

ஆகவே அப்போதிருந்த நிலைமையில் சமரசப் பேச்சுத் தொடங்குவதற்கு மகாத்மா சிறிதும் இஷ்டப்படவில்லை. ஆயினும் பண்டித மாளவியாவின் தந்திக்கு உடனே பதில் அனுப்பாமல் ஜம்னாதாஸும் குன்ஸ்ருவும் வரட்டும் என்று காத்திருந்தார்.

அவர்களும் வந்தார்கள். வந்து மகாத்மாவிடம் சமரஸ முயற்சியின் நோக்கம் என்ன வென்பதைச் சொன்னார்கள்.

"நீங்கள் ஒரு பக்கம் பிடிவாதமாயிருக்கிறீர்கள்; சர்க்கார் இன்னொரு பக்கம் பிடிவாதமாயிருக்கிறார்கள். இரண்டு பக்கத்துப் பிடிவாதத்துக்கு மிடையில் தேசம் குட்டிச் சுவராகப் போகிறது. அப்படி அடியோடு தேசம் குட்டிச் சுவராகாமல் தடுத்துக் காப்பாற்ற நாங்கள் இந்த ராஜி முயற்சி தொடங்கியிருக்கிறோம். அதற்காகக் கல்கத்தாவில் லார்ட் ரெடிங்கைப் பேட்டி காணப் போகிறோம். நீங்கள் உங்கள் பக்கத்தில் கொஞ்சம் விட்டுக் கொடுப்பதற்கு முன் வந்தால் லார்ட் ரெடிங்கும் விட்டுக் கொடுக்க முன்வர வேண்டும் என்று நாங்கள் வற்புறுத்துவோம்" என்று அவர்கள் சொன்னார்கள்.

"லார்டு ரெடிங் விட்டுக் கொடுக்க முன் வருவார் என்பதற்கு உங்களுக்கு ஏதாவது அறிகுறி தெரிகிறதா? அதற்கு ஆதாரம் ஏதாவது உண்டா?" என்று காந்திஜி கேட்டார்.

"ஆமாம்; இருக்கிறது. ஆனால் நீங்களும் விட்டுக் கொடுக்க வேண்டும்" என்றார்கள் சமரசத் தூதர்கள்.

"நான் எந்த விதத்திலே விட்டுக் கொடுக்க வேண்டும்?" என்று மகாத்மா காந்தி கேட்டார்.

"இப்போது தேசத்தில் நடக்க வேண்டும் சட்ட மறுப்பை நீங்கள் நிறுத்த வேண்டும். வேல்ஸ் இளவரசர் பகிஷ்காரத்தையும் நிறுத்த வேண்டும். இந்த இரண்டையும் நீங்கள் செய்தால் சர்க்காரை அடக்கு முறைச் சட்டங்களை வாபஸ் வாங்கச் செய்வோம். அதோடு அரசியல் பிரச்னையைத் தீர்த்து வைக்க வட்டமேஜை மகாநாட்டைக் கூட்டும்படியும் வற்புறுத்துவோம்" என்றார்கள்.

இதற்கு மகாத்மா சொன்னார்:— "நீங்கள் சொல்லும் சமரச யோசனை அவ்வளவு நியாயமாகத் தோன்றவில்லையே? 'நீ அரிசி கொண்டு வா! நான் அவல் கொண்டு வருகிறேன். இரண்டு பேரும் ஊதி ஊதித் தின்போம்' என்பதுபோல அல்லவா இருக்கிறது? சர்க்காரின் அடக்குமுறைச் சட்டங்களினாலேதான் இப்போது நடக்கும் தனிநபர் சட்ட மறுப்பு நடந்து வருகிறது. 'தொண்டர் படை சேர்க்கக் கூடாது' 'பொதுக் கூட்டம் நடத்தக்கூடாது' என்பது போன்ற சட்டங்களைச் சர்க்கார் பிரயோகிக்கா விட்டால், இப்போது நடக்கும் சட்ட மறுப்பும் நடைபெறாது. ஆகவே 'சட்ட மறுப்பை நிறுத்தினால் அடக்குமுறைச் சட்டங்களை வாபஸ் வாங்குகிறோம்' என்பதில் அர்த்தமில்லை. ஒத்துழையாமை இயக்கமும் நான் பர்தோலியில் ஆரம்பிக்கப்போகும் பொதுஜனச் சட்டமறுப்பு இயக்கமும் வேறு விஷயங்கள். பஞ்சாப் - கிலாபத் அநீதிகளை நிவர்த்தித்துச் சுயராஜ்யம் தரவும் அரசாங்கத்தார் ஒப்புக் கொண்ட பிறகுதான் அந்த இயக்கங்களை நிறுத்த முடியும். இல்லாவிட்டால் நடத்தியே தீரவேண்டும். வேல்ஸ் இளவரசர் பகிஷ்காரத்தையும் நிறுத்த முடியாது. வேல்ஸ் இளவரசர் சொந்த முறையில் இங்கே வரவில்லை. பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துக்குப் பலம் கூட்டுவதற்காகவே வருகிறார். ஆகவே தேசத்தின் கோரிக்கைகள் நிறைவேறினால் அன்றி வேல்ஸ் இளவரசர் பகிஷ்காரத்தை நிறுத்த முடியாது!"

இவ்விதம் மகாத்மா சொன்னதைக் கேட்ட ஜம்னாதாஸும் குன்ஸ்ருவும் மேலும் தங்களுடைய வாத சக்தியை யெல்லாம் உபயோகப்படுத்தினார்கள். கடைசியில் "நீங்கள் சமாதானப் பிரியர் என்று நினைத்தோமே? அதற்கு மாறாகப் பேசுகிறீர்களே? சமாதானப் பேச்சுப் பேசுவதினால் என்ன கெட்டுப் போய்விடும்?" என்றார்கள்.

"ஒன்றும் கெட்டுப் போகாது. நியாயமான சமாதானத்துக்கு நான் எப்போதும் தயார்" என்றார் மகாத்மா.

"அப்படியானால் வட்ட மேஜை மகாநாடு கூட்டுவதில் உங்களுக்கு ஆட்சேபம் என்ன?" என்று கேட்டார்கள்.

ஏற்படுவது மிக அவசியம்" என்று வற்புறுத்தி ஓர் அறிக்கை விட்டார்கள்.

ஆனால் இதெல்லாம் போதாது என்று மிதவாதிகள் கண்டார்கள். 'கழுவுக்கேற்ற கோமுட்டி'யாக யாராவது ஒருவரைப் பிடிக்க வேண்டும் என்று எண்ணினார்கள். அவ்விதம் பண்டித மதனமோகன மாளவியாவைப் பிடித்தார்கள்.

பண்டித் மாளவியா அச்சமயத்தில் ஆற்றில் ஒருகாலும் சேற்றில் ஒரு காலுமாக இருந்தார். காந்திஜியிடத்தில் அவருக்கு அன்பும் மதிப்பும் உண்டு. அவருடைய தேசபக்தி தீவிரமானது. அவர் மிதவாதக் கட்சியில் சேர்ந்தவர் அல்ல; காங்கிரஸிலேயே ஒட்டிக் கொண்டிருந்தவர். ஆனால் மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. முக்கியமாக, கலாசாலை பகிஷ்காரத்தை அவர் ஆட்சேபித்தார். பல கோடி ரூபாய் நன்கொடைகள் வசூல் செய்து பண்டித மாளவியா காசி சர்வ கலாசாலையை ஏற்படுத்தியிருந்தார். மகாத்மாவோ அந்தச் சர்வகலாசாலைக்குச் சர்க்காருடன் இருந்த தொடர்பை ரத்து செய்து விட்டுப் பூரண தேசிய சர்வ கலாசாலை ஆக்கிவிட வேண்டும் என்று சொன்னார். இதற்குப் பண்டித மாளவியா இணங்கவில்லை.

மற்ற மிதவாதத் தலைவர்களின் உள்ளங்களைக் காட்டிலும் மாளவியாவின் உள்ளம் சர்க்காரின் அடக்கு முறையினால் அதிகம் கலங்கிக் கொந்தளித்தது. ஆகையால் எப்படியாவது ஒரு சமரசம் ஏற்பட்டு விட்டால் அவருக்கு அதில் ரொம்ப சந்தோஷம் உண்டாகும். இதை அறிந்த மிதவாதிகள் பண்டித மாளவியாவைத் தங்களுடைய கருவியாக்கிக் கொள்ளத் தீர்மானித்தார்கள்.

ஸ்ரீ ஜம்னாதாஸ் துவாரகாதாஸ் பம்பாய் நகரைச் சேர்ந்தவர். டாக்டர் பெஸண்ட் அம்மையின் சிஷ்யர். பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு ஐக்ய மாகாணவாசி; அப்போதும் இப்போதும் மிதவாதி. (இன்றைக்கு அவர் ஸ்ரீ கோகலே ஆரம்பித்த இந்திய ஊழியர் சங்கத்தின் தலைவர்.) இவர்கள் இருவரும் பண்டித மாளவியாவைப் பார்த்துப் பேசினார்கள். மகாத்மாவுக்கும் சர்க்காருக்கும் சமரசம் உண்டு பண்ணிவைக்க முயற்சி எடுக்க வேண்டும் என்று சொன்னார்கள்.

ஏற்கனவே இன்னொரு நண்பர் பண்டித மாளவியாவிடம் இதைப் பற்றிப் பிரஸ்தாபித்திருந்தார். (மாளவியா பிறகு விடுத்த அறிக்கையில் 'ஒரு நண்பர்' என்று குறிப்பிட்டிருக்கிறார். இவ்விதம் அவர் குறிப்பிட்டிருப்பது அச்சமயம் வைஸராய் நிர்வாக சபையில் அங்கத்தினரா யிருந்த ஸர் தேஜ்பகதூர் சப்ரூவாக இருக்கலாம் என்பது சிலருடைய ஊகம். நேரு, ஸப்ரூ, மாளவியா மூவரும் அலகாபாத்தைச் சேர்ந்த பிரமுகர்கள் என்பது ஞாபகம் இருக்க வேண்டும்.)

வேல்ஸ் இளவரசர் காசி ஹிந்து சர்வ கலாசாலைக்கு டிசம்பர் மீ 14உ விஜயம் செய்தார். அதே சமயத்தில் லார்ட் ரெடிங்கும் வந்திருந்தார். லார்ட் ரெடிங்குடன் மாளவியா பேட்டி கண்டு பேசினார். அதன் பேரில் அவருக்குச் சிறிது நம்பிக்கை ஏற்பட்டது. சர்க்காருக்கும் காங்கிரஸுக்கும் ராஜி செய்து வைக்கத் தாம் ஒரு முயற்சி செய்ய வேண்டியது தான் என்று தீர்மானித்தார். உடனே அலகாபாத்துக்கு வந்து சில நண்பர்களிடம் கலந்து பேசிவிட்டு மகாத்மாவுக்கு ஒரு தந்தி கொடுத்தார். அந்தப் பிரசித்தி பெற்ற தந்தியின் விவரம் வருமாறு:—

அலகாபாத்
16—12—21

வருகிற 21உ யன்று வைஸ்ராயைப் பேட்டி கண்டு வட்ட மேஜை மகாநாடு கூட்டும்படி வற்புறுத்தப் போகிறோம். ஏழு பேர் அடங்கிய பிரதிநிதிக் கூட்டமாக வைஸ்ராயைப் பார்ப்போம். இதை முன்னிட்டுக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நிலைமையை நேரில் உங்களுக்கு விளக்கிச் சொல்வதற்காக ஜம்னாதாஸும் குன்ஸ்ருவும் அங்கே வருகிறார்கள். சர்க்கார் வட்டமேஜை கூட்ட ஒப்புக் கொண்டு தலைவர்களையும் விடுதலை செய்ய இணங்கினால் வேல்ஸ் இளவரசர் பகிஷ்காரத்தை வாபஸ் வாங்கவும் சட்ட மறுப்பை நிறுத்தி வைக்கவும் உங்கள் சார்பில் நான் வாக்குறுதி கொடுப்பதற்கு அனுமதி வேண்டும். 21உ வரையில் கல்கத்தா விலாசம் டெம்பர் 31, பர்னேஸ் தெரு.

மாளவியா.

இந்தத் தந்தி மகாத்மாவைத் தூக்கி வாரிப் போட்டது. தேசமெங்கும் சட்ட மறுப்பு இயக்கம் மகாத்மாவின் மனதுக்கு உகந்த முறையில் நடந்து கொண்டிருக்கும் போது இந்த ராஜிப் பேச்சு குறுக்கிடுவது அவருக்குப் பிடிக்கவில்லை. லார்ட் ரெடிங்கின் அந்தரங்க சுத்தியில் பல காரணங்களினால் அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ராஜிப் பேச்சும் வட்ட மேஜை மகாநாடும் அச்சமயத்தில் வெறும் ஏமாற்றமாக முடியும் என்று அவர் கருதினார். கல்கத்தாவுக்கு வேல்ஸ் இளவரசர் 24உ வருவதாக இருந்தது. கல்கத்தா நகரம் ஒன்றிலாவது இளவரசர் பகிஷ்காரம் இல்லாமலிருந்தால் அதிகார வர்க்கத்துக்கு மிகவும் திருப்தியாயிருக்கும். அந்த விஜயம் சரிவர முடிந்த பிறகு லார்ட் ரெடிங் வட்டமேஜை மகா



# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா. கி.

## 32. மாளவியா மத்தியஸ்தம்

காந்தி மகாத்மா இந்தியாவின் அரசியல் தலைமை ஏற்றதிலிருந்து மிதவாதிகளின் மனதில் நிம்மதியில்லாமற் போய் விட்டது. பெஸண்டு அம்மையாரும் மிதவாதிகளுடன் சேர்ந்துகொண்டார். மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கம் மிகப் பெரும் தவறான இயக்கம் என்று அவர்கள் கருதினார்கள்.

ஆரம்பத்தில் மிதவாதிகள் ஒத்துழையாமை இயக்கம் நாட்டில் செல்வாக்குப் பெறாமல் புசுபுசுத்துப் போய்விடும் என்று நினைத்தார்கள். மூன்று வகை பஹிஷ்காரம் எதிர்பார்த்த அளவு வெற்றியடையாதது குறித்து ஓரளவு மகிழ்ச்சியுடன் அலட்சியமாய்ப் பேசினார்கள். ஆனால் 1921-ம் வருஷம் ஏப்ரல் மாதத்துக்குப் பிறகு அந்த இயக்கம் பொது ஜனங்களிடையில் அடைந்து வந்த செல்வாக்கு மிதவாதிகளைத் திகைப்படையச் செய்தது. நாளுக்கு நாள் ஒத்துழையாமை இயக்கம் பலம் பெற்று வருவதை அவர்கள் விரும்பவில்லை. மகாத்மாவின் பேச்சுக்களும் எழுத்துக்களும் பாமர ஜனங்களின் மனதில் கிளர்ச்சி எழுப்பி வந்ததையும் அவர்கள் நல்லதென்று நினைக்கவில்லை. ஆயினும், இதெல்லாம் என்ன நடந்துவிடப் போகிறது என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் நவம்பர் கடைசியிலும் டிசம்பர் ஆரம்பத்திலும் நாட்டில் நிகழ்ந்த சம்பவங்கள் மிதவாதிகளைத் திக்குமுக்காடும்படி செய்துவிட்டன.

வேல்ஸ் இளவரசர் விஜயத்தைப் பஹிஷ்காரம் செய்யவேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானித்தது மற்றொரு பெருந் தவறு என்று மிதவாதிகள் கருதினார்கள். அந்தப் பஹிஷ்காரம் ஒருநாளும் காரியத்தில் நிறைவேறாது என்றும் சொல்லி வந்தார்கள். ஆனால், வேல்ஸ் இளவரசர் போன இடமெல்லாம் பொதுமக்கள் பூரண பஹிஷ்காரத்தைக் கைக்கொண்டது மிதவாதிகளைக் கொஞ்சம் விழிப்படையச் செய்தது. "ஓகோ! ஜனங்களின் உணர்ச்சி இப்படி இருக்கிறதா? மகாத்மாவின் செல்வாக்கு இவ்வளவு பெருகியிருக்கிறதா!" என்று அதிசயித்தார்கள்.

பின்னர் அதிகார வர்க்கத்தார் கையாண்ட தீவிர அடக்குமுறைகள் மிதவாதிகளை வேறொரு வகைக் கலக்கத்துக்கு உள்ளாக்கின. அடக்குமுறைகளினால் மக்களின் எழுச்சியை அடக்க முடியாது என்று அவர்களுக்குத் தோன்றியது. மேலும் பண்டித மோதிலால் நேரு முதலிய பிரமுகர்கள் சிறைப்படுத்தப் படுவதைப் பார்த்துக்கொண்டு அவர்களால் சும்மா இருக்க முடியவில்லை. பலர் உண்மையிலேயே வேதனை அடைந்தார்கள். வேறு சிலருக்கு "இப்போது நாம் இந்த அடக்குமுறைகளைப் பார்த்துக்கொண்டு சும்மா இருந்துவிட்டோமானால் நாளைக்கு எப்படிப் பொது மக்களின் முன்னால் நம்முடைய முகத்தைக் காட்ட முடியும்!" என்ற கவலை உண்டாயிற்று.

ஆகக்கூடி, மிதவாதிகள் தீவிரமாக யோசனை செய்ய ஆரம்பித்தார்கள். நாட்டில் அப்போது ஏற்பட்டிருந்த நிலைமையில் தாங்கள் தலையிட்டு ஏதேனும் செய்ய வேண்டும் என்று கருதினார்கள். ஆகவே, "நாங்கள் ராஜி செய்து வைக்கிறோம்" என்று முன்வந்தார்கள். "இரண்டு தரப்பிலும் சிற்சில பிசகுகள் நடந்திருக்கின்றன. போனதெல்லாம் போகட்டும். அவற்றை மறந்துவிடுவோம். எல்லாருமாகச் சேர்ந்து உட்கார்ந்து வட்டமேஜை மகாநாடு நடத்துவோம். ஒரு சமரசமான முடிவுக்கு வருவோம்!" என்றார்கள்.

அதாவது தேசத்தில் காங்கிரஸ் தலைவர்களின் மகா தியாகங்களினால் ஏற்பட்டிருந்த நிலைமையில், தாங்கள் அடியோடு இழந்துவிட்டிருந்த செல்வாக்கை மீண்டும் ஒருவாறு நிலைநாட்டிக் கொள்ளலாம் என்று பார்த்தார்கள்.

மிதவாதப் பத்திரிகைகள் முதலில் எழுதத் தொடங்கின:—"இரண்டு தரப்பிலும் விட்டுக் கொடுத்து சமரசமாகப் போகவேண்டும். இல்லாவிட்டால் தேசம் குட்டிச்சுவராகப் போய்விடும்" என்று.

பிறகு மிதவாதச் சங்கங்கள் அந்தக் கருத்துடைய தீர்மானங்கள் செய்தன. இந்திய சட்டசபையில் அங்கத்தினராயிருந்த மிதவாதக் கட்சியினர் சிலர் "காங்கிரஸுக்கும் சர்க்காருக்கும் சமரசம்












8. தமிழ்நாடு எல்லைப் படத்தைத் திறந்து வைத்த ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார்; 9. ஸ்ரீ எஸ். என். சோமயாஜுலு; 10. ஸ்ரீ இ. ஆ. பெ. விசுவநாதம்; 11. தமிழ்நாடு எல்லைப் படம்; 12. மகாநாட்டுப் பந்தலின் ஒரு தோற்றம்; 13. கொடி யேற்றிவைத்த ஸ்ரீமதி சரஸ்வதி பாண்டுரங்கம்; 14. பொருளாளர் ஸ்ரீ ஏ. குஞ்சன் நாடார்; 15. ஸ்ரீ தி.த.நா. காங்கிரஸ் தலைவர், ஸ்ரீ எஸ். நந்தரவியம்


















# தமிழ் நாடு எல்லை மாநாடு

1. மகாநாட்டைத் திறந்துவைத்த கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. 2. பிரதிநிதிகளை வரவேற்ற ஸ்ரீ தேசமணி எம். எல். ஏ., 3. மகாநாட்டுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி பாரதி; 4. காந்தி சுட்டத்தில் நடந்த கொடியேற்று விழா; 5. விளம்பர நிர்வாகி ஸ்ரீ பி. எஸ். மணி; 6, 7. வரவேற்புக் கமிட்டிக் காரியதரிசிகள் ஸ்ரீ ஆர். தாணுப்பிள்ளை; ஸ்ரீ பி. ஜே. பொன்னையா.



சென்ற ஜனவரி மாதத்தில் திருவா கூர் தமிழ்நாடு காங்கிரஸ் ஆதரவி கன்யாகுமரியில் தென்குமரி எல் மகாநாடு வெகு சிறப்பாக நடைபெ றது. கவிமணி தேசிக விநாயக பிள்ளை அவர்கள் மேற்படி மகாநா டைத் திறந்து வைத்து, சரித்திர தில் பல ஆதாரங்களையும் மே கோள்களையும் எடுத்துக் காட் நாஞ்சில் நாடு தமிழகத்துடன் சேர் கப்பட வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தி அழகாகப் பேசினா மதுரை தேசபக்தர் ஸ்ரீ எல். கிருஷ்ண சாமி பாரதி அவர்கள் மேற்ப மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார் தமிழரசுக் கட்சித் தலைவர் ஸ்ரீ ம பொ. சிவஞான கிராமணியார் அவ களும் "நெல்லை செய்தி" ஆசிரிய ஸ்ரீ சோமயாஜுலு அவர்களும் மேற் படி மகாநாட்டில் கலந்து கொண் சொற்பொழிவாற்றி மகாநாட்டை சிறப்பித்தார்கள்.







# வரட்சியும், புழுதியும் கொண்ட காலம்

## நோயை உண்டாக்குகிறது



## தொண்டைப்புண் ஜாக்கிரதையாயிருங்கள்

வரட்சியான சீதோஷ்ண நிலைமையுள்ள காலத்தில் காற்றில் கிருமிகள் கலந்திருக்கின்றன. அதனால் வரட்சியும் தொண்டைப் புண்ணும் உண்டாகிறது. பின்விட்டு வரும் கடுமையான நோய்களுக்கு இவை அறிகுறியாகும். எனவே உடனடியாக இவற்றைக் குணப்படுத்திக் கொள்ளவேண்டும். இதற்கு 'ஆஸ்ப்ரோ' விரைவில் சிகிச்சையளிக்கும் வாய் கொப்புளிக்க உபயோகித்தால் தொண்டைக்கு இதமாயிருக்கும்; வரட்சி நீங்கும்; நிச்சயமாய் குணமேற்படும்; வியாதி தொத்திக் கொள்ளும் தன்மையும் தவிர்க்கப்படும். இன்றே ஒரு பாக்கெட் வாங்குங்கள்—1½ அணாதான் அல்லது 15 அணா—அவசரத்திற்கு உதவ 'ஆஸ்ப்ரோ' உங்களிடம் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள்.

## துரித நிவாரணி

'ஆஸ்ப்ரோ' உங்களையும் உங்கள் குடும்பத்தையும் கீழ்க்கண்ட நோய்களிலிருந்து காப்பாற்றும்:

**நரம்புவலி, ஜலதோஷம், இன்புளுயென்ஸா, தொண்டைப்புண், முதுகுவலி, தலைவலி, கீல்வாதம், பூட்டுவலி, பிடிப்பு, தூக்கமின்மை.**

## 'ஆஸ்ப்ரோ'வைக் கொண்டு கொப்புளிக்கவும்



**விலைகள்: அணா 1½ (3 வில்லைகள்) அணா 15 (30 வில்லைகள்)**

செய்ய வேண்டியதை யெல்லாம் செய்தார்கள். ருஷியா இன்றைக்கு உலகத்திலே மிகப் பெரிய வல்லரசாக,—அமெரிக்காவையும் எதிர்த்து நிற்கக்கூடிய பேரரசாக,—விளங்குவதற்கு அந்த ஆயிரக்கணக்கான நாடக மேடைகளே காரணமாகும்.

அவ்வளவு சக்தியுள்ள ஒரு சாதனத்தை நசிக்கும்படி விடுவதைப்போல அறிவீனம் வேறு என்ன இருக்க முடியும்?

• • •

இந்தியா இன்றைக்குப் பூரண சுதந்திரம் பெற்றிருக்கிறது. குடியரசும் ஸ்தாபிதமாகி விட்டது. ஆனால் இத்துடன் வேலை முடிந்து விடவில்லை. நாட்டில் எல்லாவித முன்னேற்றங்களும் இனிமேலேதான் ஏற்பட வேண்டும்.

நாடகக் கலையை நன்கு உபயோகப் படுத்தினால் எல்லாவித முன்னேற்றங்களும் துரிதமாக ஏற்படும்.

நாடகக் கலையை என்ன நோக்கத்துக்காகப் பயன்படுத்த வேண்டும் என்பது பற்றிப் பல்வேறு அபிப்பிராயங்கள் இருக்கத்தான் இருக்கும்.

பரம பக்த சிரோமணியான நவாப் ராஜமாணிக்கம் அவர்கள் அன்று அனுப்பியிருந்த நீண்ட வாழ்த்துச் செய்தியில், "நாடகக் கலையின் மூலம் ஆஸ்திகத்தையும் தெய்வ பக்தியையும் வளர்ப்போமாக!" என்று குறிப்பிட்டிருந்தார்.

ஆஸ்தான கவிஞர் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை அவர்கள் கூறிய வாழ்த்துரையில் "நாடகக் கலையின் மூலம் காந்தீயத்தைப் பரப்ப வேண்டும்" என்று சொன்னார்.

ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்கள், "நம்முடைய முன்னோர்கள் அருளிய கற்பு முதலிய தர்மங்களை நாடகத்தின் மூலம் பரப்ப வேண்டும். ஆகவே சமூக நாடகங்களோடு பழைய புராண இதிகாசக் கதைகளையும் நடிக்க வேண்டும்" என்று சொன்னார்.

இம்மாதிரி நாடகத்தின் மூலம் பலவித இலட்சியங்களையும் நாட்டில் பரப்புவதற்கு இடம் இருக்கிறது.

ஆனால் முதலில் நாடகக் கலை வளர வேண்டும். நாடகக் கலை நன்கு வளர்ந்தால் அதை அவரவர்களும் தங்கள் தங்களுக்கு முக்கியமாகத் தோன்றும் இலட்சியங்களுக்கு உபயோகித்துக் கொள்ளலாம்.

ஆகவே என் அபிப்பிராயம், நாடகக் கழகத்தின் இலட்சியம் நாடகக் கலையை வளர்ப்பதாகவே இருக்கவேண்டும் என்பதுதான்.

யார் எந்த இலட்சியத்துக்காக அதை உபயோகப் படுத்தினாலும், மொத்தத்தில் நாடகக் கலை வளர்ச்சியினால் சமூகம் நன்மையடையும் என்பதில் சந்தேகம் இல்லை.

• • •

ஜனவரி 28-ந் தேதி ஆரம்பிக்கப்பட்ட நாடகக் கழகம் சிறந்த இடம், பொருள், ஏவல் ஆகிய சாதனங்களுடன் நன்கு ஆரம்பமாகியிருக்கிறது.

இடம் மிகவும் 'ஆய் வந்த' இடம். காங்கிரஸ் பொருட் காட்சி அரங்க மேடை. இங்கே சென்ற ஒன்றரை மாதத்தில் பல உயர்ந்த நாடகங்கள் நடந்து பதினாயிரக் கணக்கான மக்கள் பார்த்துக் களித்திருக்கிறார்கள். அத்தகைய மேடையில் ஆரம்பமான நாடகக் கழகம் சிறந்து விளங்கிப் பணியாற்றும் என்பதில் சந்தேகமில்லை.

தற்சமயம் தமிழ் நாட்டில் நாடகக் கலையில் தலைசிறந்து விளங்குவோரில் ஒருவரான ஸ்ரீ டி. கே. சண்முகம் நாடகக் கழகத்தின் தலைவர் பதவியை ஏற்றிருக்கிறார்.

அமெச்சூர் நடிகர்களின் இணையில்லாத் தலைவர் என்று சொல்லக்கூடிய ஸ்ரீ வி. வி. கோபால ரத்தினம் அவர்களும், மற்றும் நாடக மேடையிலும் வெள்ளித் திரையிலும் புகழ்பெற்ற ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன், ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர், ஸ்ரீ எஸ். வி. சகஸ்ரநாமம் முதலியவர்களும் கழகத்தின் துணைத் தலைவர்கள். டைரக்டர் கே. சுப்பிரமண்யமும் சிறந்த நகைச்சுவை நடிகரான ஸ்ரீ டி. என். சிவதாணுவும் செயலாளர்கள். 'அந்தக் காலத்திலே காலேஜிலே படித்த' ஸ்ரீ கே. சாரங்கபாணி கழகத்தின் பொக்கிஷதார். மற்றும் நாடக நூலாசிரியர்கள், பத்திரிகாசிரியர்கள், நடிகர்கள், ரசிகர்கள் முதலியோர் கழகத்தில் உறுப்பினரா யிருக்கிறார்கள்.

பல வேறு ஸ்தாபனங்களில் பல்வேறு பணிகளில் ஈடுபட்டிருக்கும் இத்தனை பேரும் ஒருங்கு சேர்ந்து இந்த நாடகக் கழகத்தைத் தொடங்கி யிருக்கிறார்கள். ஆகையினாலேயே இதை இருபத்தெட்டாந் தேதி அற்புதம் என்று சொன்னேன்.

இந்த அற்புதம் ஒருநாள் அற்புதமாகவோ, ஒரு வருஷ அற்புதமாகவோ போய்விடாது என்று நிச்சயமாக நம்புகிறேன்.

பாரதக் குடியரசைப் போலவே இந்த நாடகக் கழகமும் நீடூழி நிலைத்து நின்று தமிழ் நாட்டுக்கு ஒப்பற்ற தொண்டுபுரியும் என்று எதிர்பார்க்கிறேன்.

காகவே 'நாடகக் கழகம்' ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

• • •

நாடகக் கலை நசித்து வருவதாக இருந்தால், அதற்கு அப்படிப் பிரயத்தனப்பட்டுப் புத்துயிர் கொடுக்க வேண்டிய அவசியம் என்ன? அதை வளர்க்கவேண்டிய அவசியம் தான் என்ன? நாடகக் கலை க்ஷீணித்து நசித்துப் போனால் போகட்டுமே? — என்று சிலருக்குத் தோன்றக்கூடும்.

நாடகக் கலை க்ஷீணிக்கும்படியோ, நசித்துப் போகும்படியோ விடவே கூடாது.

அப்படி விடுவது விவேகம் சிறிதும் அற்ற செயலாகும். ஏனெனில், ஒரு நாட்டின் புனருத்தாரண முயற்சிகளுக்கு மிகவும் உதவி செய்யக்கூடிய சாதனங்களுக்குள்ளே நாடகக் கலை மிகச் சிறந்த சாதனம்.



சுதேசிப் பொருட் காட்சி அரங்க மேடையில் நடந்த நாடகங்களில் 'அனார்கலி' ஒன்று. மேலே படத்தில் உள்ளவர்கள் அனார்கலியும் அவளுடைய காதலன் ஸலீமும்.

நாடகக்கலை மற்றும் பல கலைகளைத் தனக்குள் அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் கலைப் பொக்கிஷம். நாடகத்தில் இலக்கியம் இருக்கிறது; சங்கீதம் இருக்கிறது; நடனம் இருக்கிறது; சித்திரம் இருக்கிறது; சிற்பமுங்கூட இருக்கிறது. மற்ற எல்லா அருங் கலைகளுக்கும் நாடகத்தில் இடம் இருக்கிறது. ஆகவே, நாடகக் கலை வளருவதின் மூலம் மற்ற எல்லாக் கலைகளும் வளருகின்றன.

அதுமட்டுமல்ல; மற்ற எந்தத் தனிக் கலையைக் காட்டிலும் நாடகக் கலை பெருந்திரளான மக்களின் கவனத்தைக் கவர்ந்து அவர்களை ரஸிகர்களாக்கக் கூடியது.

கவிதையை அநுபவிக்க மிக்க அறிவாற்றலும் பண்பாடும் வேண்டும். உயர்தர சங்கீதத்தை எல்லாரும் ரஸித்துவிட முடியாது. பரத நாட்டியத்தின் நுட்பங்களை அறிந்து ரஸிப்பது மிகக் கடினமான காரியம். அவ்விதமே சித்திரமும் சிற்பமும் சிலருடைய கவனத்தையே கவருகின்றன.

எனினும் இந்தக் கலைகளை வளர்ப்பதற்காக நம்முடைய சுதந்திர சர்க்கார் எவ்வளவோ செய்கிறார்கள். ஆஸ்தான கவிஞர்களை நியமித்திருக்கிறார்கள். சிறந்த இலக்கியங்களுக்குப் பரிசு கொடுக்கிறார்கள். சங்கீத - சித்திர - சிற்பக் கலாசாலைகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இத்தகைய பிரயத்தனங்களின் அவசியத்தைப் பொது மக்களும் உணர்ந்து ஆதரிக்கிறார்கள்.

ஆனால், நாடகக் கலை மட்டும் என்ன பாவத்தைச் செய்தது? நாடகக் கலையை ஏன் சர்க்காரும் பொது மக்களும் புறக்கணிக்க வேண்டும்? அந்தக் கலைக்கு உதவி செய்ய வேண்டியதன் அவசியத்தை ஏன் உணராமலிருக்க வேண்டும்?

ருஷியாவில் ஸோவியத் அரசாங்கம் ஸ்தாபனம் ஆனதும், ஸோவியத் சர்க்கார் முதன் முதலாகச் செய்த காரியம் ஒன்றை நேயர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

ஸோவியத் அரசாங்கம் ஸ்தாபிதமான முதல் மூன்று வருஷத்துக்குள்ளே ருஷியாவில் ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு பட்டணத்திலும் ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு நாடகமேடை ஏற்பட வேண்டும் என்று உத்தரவு போட்டார்கள். அந்த உத்தரவு காரியத்தில் நடப்பதற்கும் வேண்டிய ஏற்பாடு செய்தார்கள்.

இவ்விதம் நாடெங்கும் ஏற்பட்ட ஆயிரக்கணக்கான நாடக மேடைகளைக் கொண்டே பொது மக்களுக்குச் சொல்ல வேண்டியதையெல்லாம் சொன்னார்கள். பிரசாரம்

அந்த நோக்கம் என்ன என்பதை நானும் இங்கே சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

தமிழ்நாடு இந்த நாளில் பல துறைகளிலும் சிறப்பாக முன்னேறி யிருக்கிறது. சங்கீதம், நடனம், கவிதை, வசனம், சித்திரம், பத்திரிகை,—ஆகிய துறைகளில் தமிழ் நாட்டை வேறு எந்த மாகாணமும் நெருங்க முடியாது! ஏன்? சென்ற ஒரு வருஷ காலத்தில் சினிமாவிலே கூடப் பிரமாதமான வெற்றி அடைந்திருக்கிறோம்.

ஆனால் கலைகளிலே யெல்லாம் மிக முக்கியமான நாடகக் கலை மட்டும் முன்னேற்றம் அடையவில்லை; க்ஷீணித்து வருகிறது என்று கூடச் சொல்லலாம்.

இதன் காரணம் என்ன? நம்மவர்களுக்கு நடிப்புத் திறமை இல்லையா! நாடகக் கலையில் நமக்கு ஆர்வம் இல்லையா?

பிரமாதமான நடிப்புத் திறமை படைத்தவர்கள் தமிழ் நாட்டில் இருக்கிறார்கள். நாடகக் கலையில் அளவில்லாத ஆர்வம் உள்ளவர்களும் இருக்கிறார்கள்.

நவாப் ராஜமாணிக்கத்தின் தேவி நாடக சபையார், சக்தி நாடக சபையார், ஸ்ரீ டி. கே. சகோதரர்கள்,—இவர்களை நடிப்புத் திறமையில் மிஞ்சக்கூடியவர்கள் இந்நாளில் வேறு எங்குமில்லை. இவர்களையன்றி, வேறு அமெச்சூர் நடிகர்கள் எவ்வளவோ பேர் சிறந்த திறமையுள்ளவர்களாகத் தமிழ் நாடெங்கும் இருக்கிறார்கள். இருந்தும் என்ன பயன்?

அமெச்சூர் நாடக சபைகளில் பழைய காலத்து ஸுகுண விலாச சபை முதலியவற்றுடன் ஒப்பிடக் கூடிய சபை தற்சமயம் ஒன்றுமே யில்லை.

நாடகக் கலைக்கு இந்த நிலைமை ஏன் ஏற்பட்டது என்று ஆராய்ந்தால், சில காரணங்கள் உடனே புலப்படும்.

1. சினிமாக்கள் நாடகங்களுக்கு எதிரிகளாக முளைத்திருக்கின்றன. நாடகத்தைக் காட்டிலும் சொற்ப கட்டணத்தில் பல கவர்ச்சிகரமான அம்சங்கள் பொருந்திய சினிமாக்களை மக்கள் பார்க்க முடிகிறது. சினிமாக்களுக்கு ஏராளமான செலவில் விளம்பரம் செய்யப்படுவதால் நாடக மேடையைக் காட்டிலும் சினிமா மக்களின் மனதை அதிகமாகக் கவர முடிகிறது.

2. குறைந்த கட்டணத்தில் ஏராளமான ஜனங்கள் வசதியுடன் பார்க்கும்படியான நல்ல நாடகக் கொட்டகைகள் தமிழ் நாட்டில் இல்லை. இரண்டொரு நாடகக் கொட்டகைகள் இருக்கின்றன; அவையும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. அவற்றுக்குப் போலீஸ் லைசென்ஸ் கிடைப்பது பிரம்மப் பிரயத்தனமா யிருக்கிறது.

3. லட்சக்கணக்கான மூலதனம்போட்டு உற்பத்தி செய்யப்படும் சினிமாக்களையும் கலை ஆர்வம் காரணமாக நடத்தப்படும் நாடகங்களையும் ஒரே தரமாகச் சர்க்கார் மதித்து 'என்டர்டெயின்மெண்ட் டாக்ஸ்' விதிக்கிறார்கள். அதற்குத் தமிழில் 'தமாஷா வரி' என்ற அழகான பெயரும் வந்திருக்கிறது.

நவாப் ராஜமாணிக்கம் அவர்கள் எத்தனையோ இன்னல்களுக்கிடையில் அய்யப்பனிடம் வைத்த அசையா நம்பிக்கையின் காரணமாகவே தேவி நாடக சபையைத் தொடர்ந்து நடத்தி வருகிறார்.

ஸ்ரீ டி. கே. சகோதரர்கள் தங்கள் நாடகக் கம்பெனியை மூடிவிடுவதென்று தீர்மானித்திருக்கிறார்கள்.

மற்றத் தொழில் நாடக சபைகள் அநேகமாகப் பிராணனை விட்டுவிட்டன; அல்லது குற்றுயிராக ஜீவித்துக் கொண்டு வருகின்றன.



நாடக மேடை மன்னர்

நாடகக் கலைக்குத் 'தமாஷாவரி' போடுவதைப் போன்ற தமாஷ் வேறு ஒன்றும் இருக்க முடியாது. இந்தத் தமாஷா வரி நாடகம் நசிப்பதற்கு ஒரு முக்கிய காரணமா யிருக்கிறது.

இந்த மூன்று பெருங் காரணங்களினாலும் மற்றும் சில சில்லறைக் காரணங்களினாலும் க்ஷீணித்துக் கொண்டு வரும் நாடகக் கலைக்குப் புத்துயிர் கொடுத்து வளர்ப்பதற்காகவும், அவ்விதம் வளர்ப்பதற்குரிய வழிகளைக் கண்டுபிடித்துத் தகுந்த பிரயத்தனங்களைச் செய்வதற்

# இருபத்தெட்டாந்தேதி அற்புதம்

கர்நாடகம்

பாரத தேசத்தில் இந்த வருஷம் ஜனவரி மாதம் 26-ந் தேதி ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அதுதான், கத்தியின்றி இரத்தமின்றி முப்பத்து முக்கோடி மக்கள் பூரண சுதந்திரம் பெற்றுக் குடியரசு ஸ்தாபித்த அற்புதம். அதைப்பற்றிப் படித்துப் படித்து நேயர்களுக்கெல்லாம் இதற்குள்ளே அலுத்துப் போயிருக்கும். ஆகையால் அந்த இருபத்தாறாந் தேதி அற்புதத்தை அத்துடன் விட்டு விட்டு இருபத்தெட்டாந் தேதி நிகழ்ந்த இரண்டாவது அற்புதத்தைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். இது தமிழ்க் கலை உலகத்திலே நடந்த அற்புதம். அன்றைக்கு ஒரே மேடையில் பல மகாராஜாக்களும் மகாராணிகளும் வீற்றிருந்தார்கள். மந்திரிகளும் பிரதானிகளும் அமர்ந்திருந்தார்கள். சூரிய சந்திரர்களும் இந்திராதி தேவர்களும் வீற்றிருந்தார்கள். மும்மூர்த்திகளும் முனிபுங்கவர்களும் கூடக் காணப்பட்டார்கள். அவர்களுக்குப் பக்கத்திலேயே பல பிரகாசமான நட்சத்திரங்கள் ஜொலித்துக் கொண்டிருந்தன.

நாடக மேடையிலும் வெள்ளித் திரையிலும் புகழ்பெற்ற மகாராஜாக்கள், மகாராணிகள், மந்திரி பிரதானிகள் முதலியோரைப் பற்றித்தான் சொல்கிறேன்.

இத்தனை பேருக்கு நடுவில் இந்தக் காலத்து நிஜ அரசாங்க மந்திரிகள் இருவரும் காணப்பட்டார்கள். ஆஸ்தான கவி ஒருவரும் அங்கே வீற்றிருந்தார்.

தேனாம்பேட்டை காங்கிரஸ் பொருட்காட்சியைச் சேர்ந்த அரங்க மேடையிலே தான் மேற்கூறிய அதிசயமான காட்சியை 28-ந் தேதி மாலை கண்டோம்.

ஸ்ரீ டி. கே. ஷண்முகம், ஸ்ரீ வி. வெ. கோபாலரத்தினம் இவர்களைப் போன்ற நாடகமேடை மன்னர்கள் என்ன, ஸ்ரீ தியாகராஜ பாகவதர், ஸ்ரீ கே. பி. சுந்தராம்பாள் போன்ற வெள்ளித்திரை நட்சத்திரங்கள் என்ன, ஸ்ரீ சாரங்கபாணி, ஸ்ரீ ராமச்சந்திரன் போன்ற 'வால்' நட்சத்திரங்கள் என்ன,—இவர்களுக்கு மத்தியில் இக்கால அரசாங்க மந்திரிகளான கனம் பக்தவத்ஸலமும் கனம் ரோச் விக்டோரியாவும் அமர்ந்திருந்தார்கள்.

அது ஒரு அரங்க மேடை. ஒரு மாதத்துக்கு மேலாக தினந்தோறும் அந்த மேடையில் ஒரு நாடகமோ அல்லது நாட்டிய நாடகமோ நடந்து வந்தது. சில தினங்களில் இரண்டு நாடகங்கள் கூட நடந்தன. அப்படிப்பட்ட அரங்க மேடையில் நாடக மன்னர் யாராவது ஒருவர் திடீரென்று எழுந்து நின்றுகொண்டு,

"மந்திரி! நாட்டில் மும்மாரி பெய்கிறதா? நீர்வளம் நிலவளம் குறைவின்றி இருக்கிறதா? மக்களுக்குத் தினம் தவறாமல் மூன்று வேளை உணவு கிடைக்கிறதா?" என்று இப்படி ஏதாவது கேட்டு வைத்தால், கனம் பக்தவத்ஸலமும், கனம் ரோச் விக்டோரியாவும் என்ன பதில் சொல்வார்கள் என்பதைப் பற்றி எனக்குக் கவலையா யிருந்தது. அவர்கள் சொல்லும் பதில் மேற்படி நாடக மேடை மன்னருக்குத் திருப்தி யளிக்கா விட்டால், "மந்திரி! உம்மை இத்தருணமே பதவியிலிருந்து நீக்குகிறோம்!" என்றும் சொல்லிவிடக் கூடும் அல்லவா?

நல்ல வேளையாக, அப்படி யொன்றும் நேர்ந்துவிடவில்லை. ஏனெனில், அந்த அரங்க மேடையில் வீற்றிருந்த மன்னர்கள் முதலியோர் அங்கு எதற்காக கூடியிருக்கிறோம் என்பதை மறந்துவிடவில்லை. அவர்கள் அதை மறக்க முடியாதபடி நாடகக் கழகம் தொடங்குவதின் நோக்கம் என்ன என்பதை டாக்டர் சுப்பிரமணியம் ஆரம்பத்திலேயே விளக்கமாக எடுத்துரைத்து விட்டார். பிறகு நாடகக் கழகத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ டி. கே. சண்முகம் அவர்களும் அந்த நோக்கத்தை விளக்கி வெகு அழகாகப் பேசினார்.

ஆகவே அந்தக் கூட்டத்தின் நோக்கம் என்ன என்பதை யாரும் மறப்பதற்கில்லாமல் போய்விட்டது.

போதாக் குறைக்கு மகா யுத்தமும் மூண்டு விட்டதால் வெளிநாடுகளி லிருந்து இஞ்ஜின்கள் வருவது அறவே நின்று போயிற்று.

* * *

உணவுப் பொருள் முதல் பல சாத னங்களுக்கும் அன்னிய நாடுகளை எதிர்பார்க்கும் நிலைமையிலுள்ள இந்தியா, ரயில் இஞ்ஜின்களுக்கு வெளி நாடுகளையே நாடிக் கொண் டிருந்ததில் ஆச்சரியம் என்ன?

அது ஆச்சரியப்படத்தக்க விஷயம் இல்லை என்றே கூறலாம். அந்த இஞ்ஜின்கள் இருபது வருஷங்கள் அல்ல, நாற்பது வருஷங்கள் அல்ல, அதற்கு மேலும் தேய்ந்து தள்ளாடி உழைத்துக் கொண் டிருப்பதுதான் ஆச்சரியமாகும்.

அவ்விதம் சற்றேறக்குறைய ஆயிரம் வயோதிக இஞ்ஜின்கள் வேலை செய்து வருகின்றன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்?

அத்தகைய அவலமான நிலைமைக் குக் காரணம் என்ன?

இந்தியாவில் இஞ்ஜின்கள் உற்பத்தி யாகாமல் இருந்து வந்ததுதான். இஞ்ஜின்களுக்காக வெளிநாடுகளுக்கு ஆர்டர் கொடுத்தும் உற்ற சமயத்தில் அவை வந்து சேராததுதான்.

எனவே, கோடிக்கணக்கில் தொகை யைக் கொட்டியும் நம் நாட்டுக்குத் தேவையான இஞ்ஜின்கள் வெளிநாடு களிலிருந்து உற்ற சமயத்துக்கு வந்து சேராது என்பது தெரிந்து விட்டது.

இந்த நிலையில், இனியும் அவை களுக்கு அன்னிய நாடுகளையே எதிர் பார்த்துக் கொண்டிருக்கலாமா?

* * *

இதற்கு முன் நிலைமை எப்படியா யினும் இனி இந்தியக் குடியரசு சர்க் கார் ஏமாந்துபோக விரும்பவில்லை.

இஞ்ஜின்கள் இந்த நாட்டில் உற்பத்தியாக வேண்டியது மிகவும் அவசியம் என்பதை உணர்ந்து நமது சர்க்கார், தகுந்த திட்டம் வகுத்து, குடி யரசு பிறந்த தினத்திலேயே வங்காள-பீகார் எல்லையிலே சித்தரஞ்சன் என்ற இடத்தில் ரயில் இஞ்ஜின் உற்பத்தி சாலையை ஆரம்பித்திருக்கிறார்கள்.

சர்க்கார் வகுத்துள்ள திட்டத்தின் படி அந்தத் தொழிற்சாலையின் விஸ் தீர்ணம் ஏழு சதுர மைல்கள் இருக் கும். அதைச் சேர்ந்த தொழிலாளர் களும் சிப்பந்திகளுமாக முப்பதாயிரம் பேர் வசிப்பதற்கேற்ற நிரந்தரமான ஒரு சிறிய நகரையும் நிர்மாணிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள்.

இந்த விவரங்களிலிருந்து அது எவ் வளவு பெரிய ஆக்கத் திட்டம் என் பதை உணர்ந்து கொள்ளலாம்.

குடியரசு இந்தியா உலகத்திலுள்ள மற்ற நாடுகளுக்கு ஒப்பாக முன் னேற்றமும் சுபிட்சமும் அடைவதற்கு இதைப் போன்ற மற்றும் பல பெரிய திட்டங்களைச் சர்க்கார் தாமதமின்றி வகுத்து நிறைவேற்றியாகவேண்டும்.

மேற்படி இஞ்ஜின் தொழிற்சாலை இந்தியாவின் பொருளாதார, கைத் தொழில் சுதந்திரத்துக்கும் சுபிட்சத் துக்கும் அஸ்திவாரப்பணமாக அமை யும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

அதன் திறப்பு விழா வைபவத்தை நடத்தி வைத்த தேசபந்து சித்தரஞ்சன் தாஸின் மனைவியார் ஸ்ரீமதி வஸந்தி தேவி அவ்வமயம் கூறிய உருக்கமான மொழிகளைக் கேளுங்கள்:

"கைத்தொழில், விஞ்ஞானம் முத லிய பல்வேறு துறைகளிலும் பாரத நாடு உலகத்திலேயே மகத்துவமும் மாண்பும் பொருந்தியதாக விளங்க வேண்டும் என்பது என்னுடைய கண வரின் கனவாக இருந்து வந்தது. அவ ரது பெயருடன் விளங்கும் இந்தப் பிர தேசத்தில் அவருடைய கனவு பலித்து உருப்பெற்று வருவதைக் குறித்துப் பெருமை அடைகிறேன். இந்தியா தன்னுடைய யௌவனத்தையும் சிருஷ்டி சக்தியையும் மீண்டும் பெற் றிருக்கிறது என்பதையே இன்றைய வைபவம் காட்டுகிறது" என்று ஸ்ரீமதி வஸந்தி தேவி குறிப்பிட்டார்.

அந்தத் திட்டம் பூர்த்தி பெற்றபின் தற்போது வருஷா வருஷம் இந்தியா வுக்குத் தேவையான இருநூறு இஞ் ஜின்கள் உற்பத்தியாகும் என்றும், அதன் பயனாக இங்கிருந்து வருஷந் தோறும் வெளிநாடுகளுக்குச் செல்லும் அறுபது கோடி ரூபாய் நம் நாட்டி லேயே இருக்கும் என்றும் தெரிகிறது.

எனவே, இனி இந்த நாட்டிலேயே ரயில் இஞ்ஜின்கள் உற்பத்தியாகும். உழைக்கும் இஞ்ஜின்களின் வயது குறைவதன் மூலம் வர்த்தக வளர்ச்சி யும் பொருளாதார சுபிட்சமும், ஜனங் களுக்கு அதிக வசதிகளும் ஏற்படும். பொருளாதார சுபிட்சம் காரணமாக மக்களும் சந்தோஷ வாழ்வைப் பெறு வார்கள். அதன் பயனாக ஜனங்களின் சராசரி வயது அதிகமாகும்.

# கல்லுக்குள் வாழைக் கனி

கலை என்பது ஒரு விசித்திரமான காரியம், ஏதோ தாறுமாறான காரியம் என்று கூடச் சொல்லலாம்.

ஒரு பெரிய வீரனை பார்த்து, "மகாவீரன் இவன்" என்று சொன்னால் சாமான்ய வார்த்தை. ஆனால் அவனுக்குச் சம்பந்தமில்லாத ஒன்றைக் குறிப்பிட்டுச் சொல்லுவோமானால் கலை ஆகிறது.

"அவன் ஒரு சிம்மம்" என்று சொன்னவுடன் கலை ஆகி விடுகிறது. அதாவது உண்மைக்கு விளக்கம் கொடுக்கிறது. எப்படி விளக்கம் கொடுக்கிறது?

சிம்மம் கண்ணுக்கு முன் வருகிறது. அதன் வீரப் பாய்ச்சல் கண்ணுக்கு முன் வருகிறது. பிறகு சிம்மம் மறைகிறது.

உடனடியாக, வீரன் கண்முன் தோன்றுகிறான்; வீராவேசமும் தோன்றுகிறது.

இந்த விதமாக இரண்டு விஷயங்களை மனசானது தனக்குள் வைத்துப் புரட்டிப் புரட்டிப் பார்த்து அனுபவிக்கிறது.

கலையின் ரகசியம் இப்படிக் கிடக்கிறது.

•  •  •

வாழையைக் கொஞ்சம் பார்க்கலாம். தமிழர்களோடு பதினாயிரம் வருஷங்களாக நெருங்கிப் பழகி வாழ்ந்து வந்திருக்கிறது வாழை.

வாழையின் உற்பத்தியே அற்புதம். குருத்து விடுகிறது ஒரு அற்புதம், இலையாக விரிவது ஒரு அற்புதம், ஒவ்வொரு மடலும் உள்ளுக்குள் இருக்கும் தண்டுக்கும் பூவுக்கும் பாதுகாப்பாய் இருக்கிற காரியம் ஒரு தனி அற்புதம். கடைசியாகப் பூவும் கனியுமாக வெளியே வந்து வளைந்து தொங்குவது அற்புதத்தில் எல்லாம் அற்புதம்.

இத்தனை காரியங்களையும் நாம் செய்ய முடியாது. தாவர சாஸ்திர (Botany) ஆராய்ச்சிக்காக வெட்டியும் அறுத்தும் பார்க்கும் நாம்கூடச் செய்ய முடியாது.

நமக்கே செய்ய முடியாது என்று இருக்கும்போது அப்பாவி வாழையா செய்து விட முடியும்?

வாழைக்குள்ளிருக்கும் ஒரு சக்தி, நம்முடைய அறிவுக்கு எட்டாத ஒரு சக்தியே செய்து முடிக்கிறது. அந்த சக்தியைத்தான் கடவுள் என்றார்கள் நம்மவர்கள்.

கடவுள் அதன் உள்ளே இருக்கும்போது வழிபாட்டுக்குரிய வஸ்துவாகவே ஆகி விடுகிறது வாழை.

எளிதில் சமயத்தோடும் கோயிலோடும் கலந்து கொள்ளுகிறது வாழை.

•  •  •

தேவஸ்தானத்தில் மூர்த்திக்குச் செய்த அபிஷேக தீர்த்தத்தை வாழைக் குலையையும், பூவையும் காட்டும் கருங்கல் பணி வழியாக வடியும்படி செய்கிறார்கள்.

கோயிலிலுள்ள அலங்கார மண்டபத்துத் தூணின் மேல் உள்ள போதியல், வாழைப்பூ, தாறு, சீப்பு இவைகளை அழகாய்ச் சுமந்து நிற்கிறது.

அயல்நாட்டுக் கண்ணுக்குக் கல்லில் ஏதோ வளைவு நெளிவு கொடுத்தபணி என்று தோன்றும். ஆனால் தமிழர்கள் கண்ணுக்கோ வாழை தோன்றும். பசிய நீண்ட இலைகள், பொன்னிறமான பழக்குலை, சிவப்பும் நீலமும் கலந்த கூர்மை வாய்ந்த பூ இவைகளின் அழகிய வளைவும் நெளிவும் தமிழர்கள் கண்ணுக்கு முன் வந்து நிற்கும்.

மனசு செய்கிற இந்திர ஜாலம் இது. இந்த இந்திர ஜாலம் கலைக்குரிய இன்றியமையாத வஸ்து. இதெல்லாம் காரணமாகவே கோயிலை விட்டு வீட்டுக்கோ குடிசைக்கோ போன பிறகும், கல்தூணும் போதியலும் கண்முன் வந்து நிற்கும். கல் வந்து நிற்கும் போது கனியும் மெள்ள ஒதுக்கவே பார்க்கும்.

சிற்பி தன் கலையினால் கல்லை அனுபவிக்கச் செய்கிறான். கல்லுக்கு அபூர்வமான ஒரு ருசியைக் கொடுத்துவிடுகிறான்.

கலையின் உண்மையான தத்துவத்தைக் கல்தூண் அருமையாகக் காட்டிக்கொண்டு நிற்கிறது. அட்டைப் படத்தில் உள்ள வாழையையும் கல்தூணையும் உற்று நிதானமாகப் பார்க்க வேண்டும். அவற்றினிடையே பவனி வரும் மூர்த்தியையும் சேவிக்க வேண்டும். நம்முடைய முன்னோர்கள் வளர்த்த அருமையான கலையின் சக்தி பிரசன்னமாகும்.

தைந்து என மதிப்பிடப்படுகிறது. ஆனால் பிரிட்டன், அமெரிக்கா முதலிய பெரிய நாடுகளிலும் நியூஸிலந்து, ஸ்வீடன் போன்ற சிறிய நாடுகளிலும் கூட ஜனங்களின் சராசரி வயது அறுபதுக்கு மேலாகும்.

எனவே, உலகத்திலேயே இந்த அளவு ஏணியில் பாரத நாடுதான் கீழே கடைசிப் படியில் இருக்கிறது.

இந்தியாவில் மனிதருக்குத்தான் வயது குறைவாக இருந்து வருகிறதே யன்றி யந்திரங்கள் தீர்க்காயுள் வாய்ந்தவையாக இருக்கின்றன!

முப்பது வருஷ காலத்துக்கு மேல் வேலைசெய்த மனிதருக்கு சர்க்கார் பென்ஷன் கொடுத்து அவரை வீட்டுக்கு அனுப்பி விடுகிறார்கள்.

ஆனால், யந்திர வகைகளோ ஐம்பது வருஷ காலத்துக்கு மேல் ஓய்ச்சல் ஒழிவின்றி வேலை செய்கின்றன. அப்படியும் அதற்கு விடுதலை கிடைப்பதில்லை!

இந்தச் சந்தர்ப்பத்திலே மற்றொரு உதாரணத்தையும் குறிப்பிடுகிறோம்.

ரயில் இஞ்ஜின்கள் இருக்கின்றன அல்லவா? அமெரிக்கா, பிரிட்டன் முதலிய நாடுகளில் அந்த இஞ்ஜின்களின் வயது இருபதுக்கு மேல் ஓடுவதில்லை. இருபது வருஷங்கள் வேலை செய்தபின் அந்த இஞ்ஜின்கள் உபயோகமற்றுப் போய் விடுகின்றன என்று யாரும் நினைத்துவிட வேண்டாம்.

ஆனால் இருபது வருஷ காலம் உழைத்த இஞ்ஜின்களை—அவை நல்ல நிலையில் இருந்தாலும் கூட அகற்றி விட்டு அவைகளின் ஸ்தானத்தில் வேறு புதிய இஞ்ஜின்களைக் கொண்டு வந்து விடுகிறார்கள்.

'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்ற நியதிதான் அமெரிக்க தேசத்தின் பொருளாதார சுபிட்சத்துக்கு முக்கிய காரணமாகும்.

ஓட்டை ஒடிசல்களான யந்திர வகைகளுக்கும் அமெரிக்க தேசத்தின் வர்த்தக அபிவிருத்தி வேகத்துக்கும் சிறிதும் பொருந்தாது.

அதனால்தான் முன்னேற்றம் அடைந்துள்ள தேசங்களில், அடிக்கடி யந்திரங்களைப் புதுப்பித்தும் புதிய யந்திரங்களைக் கொண்டுவந்தும் வர்த்தகமும் வியாபாரமும் வருஷத்துக்கு வருஷம் விசேஷமாக வளர்ச்சி பெற்று ஓங்கும்படி செய்கிறார்கள்.

அந்த நாடுகள் யந்திர வகைகளை வெளிநாடுகளிலிருந்து தருவிப்பதாயின் பழைய யந்திரங்களை அகற்றி விட்டு அவைகளுக்குப் பதிலாகப் புதிய யந்திரங்களைக் கொண்டு வருவது என்பது எளிதில் முடியாத காரியம். அதன் விளைவாக அந்தந்த நாட்டின் செல்வமும் வெளிநாடுகளுக்குப் போய்க் கொண்டிருக்கும்.

அந்தந்த நாடுகளிலேயே அவை உற்பத்தியாவதால்தான் அத்தகைய ஏற்பாடு சாத்தியமாகிறது.

மக்களுக்குத் தேவையான சாதாரண சாதனங்கள் கூட அந்தந்த நாட்டில் தான் உற்பத்தியாக வேண்டும். அதிலும் சாதனங்களின் உற்பத்திக்கு இன்றியமையாத யந்திர வகைகளை வெளிநாடுகளிலிருந்து தருவிப்பது நாட்டின் சுபிட்சத்துக்கு எள்ளளவும் ஒவ்வாத காரியம்.

இவையெல்லாவற்றையும் காட்டிலும் முக்கியமாக, ஜனங்களின் போக்குவரத்துக்கும் வியாபார அபிவிருத்திக்கும் பண்டங்களின் போக்குவரவுக்கும் இன்றியமையாத ரயில் இஞ்ஜின்களுக்குப் பிறநாடுகளை எதிர்பார்ப்பது நாட்டின் சுபிட்சத்துக்கு முற்றிலும் குந்தகமான ஒரு நிலைமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

கைத்தொழில்களில் புரட்சிகரமான மாறுதல்களைக் கண்ட பல்வேறு நாடுகளிலும் அத்தகைய முன்னேற்றத்துக்கு ரயில் போக்குவரத்து மூலகாரணமாக இருந்து வந்திருக்கிறது.

வேகத்திலும் வசதிகளிலும் ரயில் போக்குவரத்து இதர நாடுகளில் பிரமாதமாக அபிவிருத்தி யடைந்தும், இந்தியா அன்றிருந்த நிலைமையிலேயே இருந்து வருகிறது.

இந்தியர்கள் சுதந்திரம் பெறுவதற்காகப் பல ஆண்டுகளாய்க் கிளர்ச்சி செய்தது போல், இந்த நாட்டிலேயே இஞ்ஜின்களையும் உற்பத்தி செய்ய வேண்டும் என்று முப்பது வருஷங்களாகக் கிளர்ச்சி செய்தார்கள்.

ஆனால், இந்தியாவில் திறம்பட நடந்து வந்த குடிசைத் தொழில்களையும் கப்பல் தொழிலையும் பாழாக்கிய பரதேச சர்க்கார் மிகவும் முக்கியமான இஞ்ஜின் தொழிற்சாலையைப் புதிதாக ஆரம்பிப்பார்கள் என்று எதிர்பார்ப்பது நடக்கக் கூடிய காரியமா?

எனவே, இந்தியர்களின் மற்றக் கோரிக்கைகளைப் போல் அந்தக் கூக்குரலும் செவிடன் காதில் சங்கு ஊதிய கதையாக முடிந்தது.

# விநாயகரின் வெற்றி!

"உலகத்தைச் சுற்றிக்கொண்டு யார் முதலாவதாக வருகிறார்களோ அவர்களுக்கு இந்தப் பழம் பரிசாகக் கிடைக்கும்" என்றாள் பார்வதி தேவி.

அதைக் கேட்டதுதான் தாமதம்! மயில் வாகனத்தில் ஏறிக்கொண்டு முருகப் பெருமான் வாயுவேகம் மனோவேகமாக அகண்ட உலகையும் பிரதட்சணம் செய்து வருவதற்காகப் புறப்பட்டுச் சென்றுவிட்டார்.

விநாயகரின் பாடு கஷ்டமாகி விட்டது. இயற்கையில் ஸ்தூல சரீரம்; அத்துடன் வேகமாகச் செல்லும் வாகன வசதியும் இல்லை.

யானை முகன் தீர்க்காலோசனையில் ஆழ்ந்தார். அவர் இருந்த இடத்திலேயே இருந்தாலும் அவருடைய பிரம்மாண்டமான மூளை அதிவேகமாக வேலை செய்ய ஆரம்பித்தது.

அவருடைய பார்வை அருகில் நின்று அசை போட்டுக் கொண்டிருந்த காமதேனுவின் மேல் விழுந்தது.

காமதேனுவின் வயிற்றில் உலகம் அடங்கி யிருப்பதாக வேதம் கூறுகிறது அல்லவா? உலகத்துக் கெல்லாம் உயிரைக் கொடுக்கும் அமிர்தம் அதனிடம் இருக்கிறது அல்லவா?

எனவே, சட்டென எழுந்து இரண்டொரு விநாடியில் அந்தக் காமதேனுவைப் பிரதட்சணம் செய்துவிட்டு, "உலகத்தைச் சுற்றி வந்துவிட்டேன். கொடு பழத்தை" என்றார்.

பார்வதிதேவியும் விநாயகரின் பூரண வெற்றியை அங்கீகரித்து அவரிடம் பழத்தைக் கொடுத்தாள்.

* * *

ஒரு நாட்டின் சுபிட்சத்தை நிர்ணயிக்கும் அளவு கருவி எது? அதைச் சுருங்கக் கூறி விளங்க வைப்பது சாத்தியமான காரியமா?

ஒரு சமயத்திலே இவ்வாறு கேள்வி ஒன்று எழுந்தது.

அவ்விஷயத்தை விளங்க வைப்பதற்காகச் சிலர் பெரிய கட்டுரைகளை வரைய ஆரம்பித்தார்கள். மற்றும் சிலர் பெரிய புத்தகங்களையே எழுதத் தொடங்கினார்கள். வேறு சிலர் அந்தப் பிரச்னையை விளக்குவதற்காகப் பல பல நூல்களை இயற்றித் தள்ளி அஸ்திவாரம் போட்டார்கள்.

அவ்வாறு நூல்களை இயற்றுவது சுருங்கக் கூறுவதாகுமா என்ற தர்க்கம் மேதாவிகளிடையே ஏற்பட்டது.

'தேசத்தின் சுபிட்சம்' என்பது பிரம்மாண்டமான விஷயமாதலால், அதைப் பற்றிச் சில நூல்களை எழுதுவது சுருங்கக் கூறுவதாகவே கருதப்படும் என்று தர்க்க சாஸ்திர நிபுணர்கள் வாதித்தார்கள்.

'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டி' என்பதில் பூரண நம்பிக்கையுள்ள ஒரு மேதாவி. "எவ்விஷயமும் இரண்டு வரிகளுக்கு மேற்பட்டால் சுருங்கக் கூறுவதாகாது" என்று ஒரே அடியாக அடித்துக் கூறினார்.

இந்தக் கூற்றைக் கேட்ட தர்க்க பண்டிதர்கள் அப்படியே திகைத்துப் போய்விட்டார்கள்.

"சரி! ஒரு தேசத்தின் சுபிட்சத்தைக் காட்டும் அளவுகோல் எது என்பதைத் தாங்கள் இரண்டு வரிகளில் விளக்க முடியுமா?"

தர்க்க பண்டிதர்கள் இவ்வாறு கேட்டதும், அந்த மேதாவி ஒரு விநாடி கூடத் தயங்கவில்லை.

"யந்திரங்களின் வயது குறைய வேண்டும்;
மக்களின் வயது அதிகரிக்க வேண்டும்"

என்று இரண்டே வரியில் பளிச்சென்று பதில் அளித்து வெற்றி பெற்றார்.

* * *

தனி நபருடைய பொருளாதார நிலை திருப்திகரமாக இல்லை என்பதை அவருடைய கந்தல் துணி எல்லோருக்கும் பிரகடனப் படுத்துகிறது.

அது போலவே வயதாகிக் கிழடு தட்டிய யந்திரங்கள், அந்த நாட்டின் பொருளாதார நிலை திருப்திகரமாக இல்லை என்பதைக் காட்டுகின்றன.

அற்பாயுளில் மரணம் அடைவோரின் தொகை அந்த நாடு சுபிட்சமாக இல்லை என்பதை அகில உலகமும் அறிய விளம்பரப் படுத்துகிறது.

உதாரணமாக, இந்தியாவில் மக்களின் சராசரி வயது சுமார் இருபத்

- சாஸ்திரி


ருஷ்யாவும் சீனாவும் மூன்றுகால் தாண்டவத்தில் மும்முரமாக ஈடுபட்டிருக்கின்றன.
கூட்டு ஒப்பந்தம்




காஷ்மீர்



"அம்புலி வா வா" என்று லியாகத் அலி ஒற்றைக் காலால் குதிக்கிறார்.
ஆந்திர நர்த்தனம் ஆரம்பமாகும் தேதியை எதிர்பாருங்கள்!
பாஷாவாரி மாகாண நடனப் பயிற்சிசாலை





SHASTRI

# நவீன நடனங்கள்!


சர்ச்சில் பழைய கிழவியுடன் நடனம் செய்து பிரிட்டிஷ் மக்களைச் சிரிக்க வைத்து பார்லிமெண்டு தேர்தலில் வெற்றி பெறப் பார்க்கிறார்.


யுவதியுடன் குட்டாமாலை சுற்றி வோட்டுக்களைத் தட்டிக் கொண்டு போகலாம் என்று ஆட்லி நம்புகிறார்.


புதிதாகக் கிடைத்துள்ள மோகினியுடன் விளையாடுவோமா என்ற சபலம் ட்ருமனை வாட்டுகிறது.

தான், உணவு நெருக்கடியை இந்த மாகாணம் சமாளித்து நிற்க முடியும்.

## தேன் ஒழுகப் பேசினார்

பர்மா பிரதம மந்திரி ஸ்ரீ தாகின் நூ சென்னைக்கு விஜயம் செய்தபோது, தென்னிந்திய வர்த்தக சங்கத்தினர் அவரை வரவேற்று உபசாரம் செய்தார்கள். பர்மா இந்தியர்களுக்குப் பெரிய தலைவலியாக இருந்துவரும் நில ஆர்ஜிதச் சட்டத்தைப்பற்றி ஒரு பத்திரிகைப் பிரதிநிதி கேட்ட கேள்விக்கு தாகின் நூ பதில் அளிக்கையில், "அந்தப் பிரச்னை சுமுகமாகத் தீர்க்கப்படலாம்" என்று குறிப்பிட்டார். "ஆனால் எவ்வாறு தீர்க்கப்படும் என்பது பற்றி நான் இப்போது எதுவும் சொல்லுவதற்கில்லை" என்று கூறிவிட்டார். இந்தியாவுக்கு அரிசி அனுப்புவதைக் காட்டிலும் தங்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடிய விஷயம் வேறு எதுவும் இல்லை என்றும், இந்தியா குடியரசு அந்தஸ்தை அடையும் சுபதினத்தில் இந்த நாட்டுக்கு வந்தது தமக்கு மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கிறது என்றும் பிரதமர் தாகின் நூ தேன் ஒழுகப் பேசினார்.

சென்ற வாரம் பர்மாவில் நடந்த அகில பர்மா இந்தியர் காங்கிரஸின் மூன்றாவது வருஷாந்திரக் கூட்டத்தை பர்மா வெளிநாட்டு மந்திரி ஆரம்பித்து வைத்தார். அப்போது அவர் பர்மா இந்தியர்களைப் பெரிதும் பாராட்டியதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. "பர்மா மக்கள் மகத்தான நெருக்கடியால் தவித்துக் கொண்டிருந்தபோது இந்தியர் காங்கிரஸ் செய்த ஜீவகாருண்யத் தொண்டை மறக்கவே முடியாது. தங்கள் உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்பதையும் லட்சியம் செய்யாமல் இந்தியர்கள் தொண்டு புரிந்தனர். எனவே, பர்மா அவர்களைப் பாராட்டுகிறது; அவர்களுக்கு ஹிருதய பூர்வமாக நன்றி செலுத்துகிறது" என்று பர்மா மந்திரி புகழ்ந்து பேசினார்.

## பேசிப் பலன் என்ன?

பர்மா மந்திரிகள் இவ்வாறு பரவசமாகப் பேசுவது முதல் தடவையல்ல. இத்தகைய பேச்சுக்களால் மாத்திரம் பர்மா இந்தியர்களின் கஷ்டங்களும் அவர்களுடைய சொத்துக்களுக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தும் நீங்கி விடுமா? பர்மா சர்க்கார் உத்தியோகத்திலிருந்து ஆயிரத்துக்கு மேற்பட்ட இந்தியர்கள் ஏற்கெனவே வேலையிலிருந்து தள்ளப்பட்டு விட்டார்கள். பர்மாவில் ஏற்பட்ட உள்நாட்டுக் கலகத்தால் இந்தியர்கள் அடைந்த கஷ்ட நஷ்டங்கள் அற்ப சொற்பமல்ல. போதாக்குறைக்கு பர்மா சர்க்கார் பிறப்பித்துள்ள நில ஆர்ஜிதச் சட்டமும் அங்குள்ள இந்தியர்களைத் திகில் அடையச் செய்திருக்கிறது.

தங்கள் தங்கள் நாட்டிலுள்ள ஜனங்களின் சொத்துக்களுக்கு நியாயமான பாதுகாப்பு அளிக்க வேண்டியது அரசாங்கங்களின் மூலாதாரமான கடமைகளில் ஒன்று. தங்களுடைய சொத்துக்களுக்கு நியாயமான நஷ்ட ஈடு பெறுவது ஜனங்களின் ஜீவாதார உரிமைகளில் ஒன்று. ஆனால் பர்மா இந்தியர்களுடைய மேற்படி ஜீவாதார உரிமைக்கு ஆபத்து ஏற்பட்டிருப்பதை இதற்கு முன் எடுத்துக் காட்டியிருக்கிறோம். எனவே, பர்மா மந்திரிகள் என்ன பேசுகிறார்கள் என்பதைக் காட்டிலும் என்ன செய்கிறார்கள் என்பதே முக்கியமாகும். பர்மா இந்தியர்களின் கஷ்டங்கள் தீருவது பர்மா மந்திரிகளின் அருமையான பிரசங்கங்களைப் பொறுத்ததல்ல. நேர்மையான செயலையே பொறுத்திருக்கிறது.

## பிரிட்டனுக்கு வாரிசு!

"இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி இருந்தபோது பட்டாணியர்களான மலைவாசிகள் விஷயத்தில் பிரிட்டிஷார் எவ்வளவு படுமோசமான முறைகளைக் கைக்கொண்டார்களோ அதே முறைகளை இப்போது பாகிஸ்தான் சர்க்கார் கைக்கொண்டு பிரிட்டனுக்கு வாரிசாக இருந்து வருகிறார்கள்" என்று புதுடில்லியிலுள்ள ஆப்கன் ஸ்தானீகரான சர்தார் நஜீப் உல்லாகான் கூறுகிறார்.

வடமேற்கு எல்லை மாகாணத்தில் சுயநிர்ணய உரிமை கோரும் பட்டாணியர்களைப் பாகிஸ்தான் சர்க்கார் அடக்கி ஒடுக்கி வருகிறார்கள். பிரிட்டிஷார் எத்தனையோ வருஷங்களாகக் கொடிய பலாத்கார முறைகளைப் பிரயோகித்தும் அடக்கி ஆள முடியாத மலைவாசிகளைக் கூட பாகிஸ்தான் சர்க்கார் தங்களுடைய ஆட்சியின் கீழ்க் கொண்டு வரச் சூழ்ச்சி செய்து வருகிறார்கள். முஸ்லிம்களான பட்டாணியர்களின் சுயநிர்ணய உரிமையை நசுக்க முற்பட்டிருக்கும் பாகிஸ்தான், காஷ்மீர முஸ்லிம்களின் சுதந்திர உரிமைக்காக நீலிக்கண்ணீர் வடிப்பது விந்தையாக இருக்கிறது. எப்படியும் மலைவாசிகளோ, பட்டாணியர்களோ, காஷ்மீர முஸ்லிம்களோ பிரிட்டனின் வாரிசாக விளங்க முயற்சிக்கும் பாகிஸ்தானுக்குப் பணியப் போவதில்லை என்பது நாளுக்கு நாள் நிதர்சனமாகி வருகிறது.



# கல்கி

மலர் 9     இதழ் 27

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்


## என்ன சேதி?

### காய்ந்தது! பெய்ந்தது!

தமிழ் ஜில்லாக்களில் காய்ந்து கெடுத்தது! ஆந்திர ஜில்லாக்களில் பெய்ந்து கெடுத்தது! பருவகால மழை இல்லாததால் தமிழ் நாட்டைச் சேர்ந்த பல ஜில்லாக்களில் விளைச்சல் குறைந்து போயிற்று. ஆந்திரப் பிரதேசங்களில் ஏற்பட்ட பெரு வெள்ளம் காரணமாக அங்கு விளைச்சல் பாழாகிவிட்டது. இதன் விளைவு என்னவெனில், இந்த மாகாணத்துக்குத் தேவையாக இருக்கும் இருபத்தொன்று லட்சம் டன் அரிசியில் இழுத்துப் பறித்துக்கொண்டு பதினைந்து லட்சம் டன்னாவது கிடைக்குமா என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மீதி ஆறு லட்சம் டன்னுக்கு எங்கு போவது?

மேற்படி பற்றாக் குறையை ஈடு செய்ய இந்திய சர்க்கார் மூன்று லட்சம் டன் கொடுப்பதாக உறுதி கூறியிருக்கிறார்கள் என்றும், இருந்தாலும் எதிர்கால நிலைமை திருப்தி அளிப்பதாக இல்லை என்றும் சென்னை சர்க்கார் உணவு மந்திரி ஸ்ரீ ரோச் விக்டோரியா கூறுகிறார். எனினும், நிலைமை எல்லை மீறிப் போய்விடாமல் இருப்பதற்கான எல்லா நடவடிக்கைகளையும் சென்னை சர்க்கார் கைக்கொண்டு வருவதாக உணவு மந்திரி உறுதி கூறியிருப்பது சிறிது ஆறுதலைக் கொடுக்கக் கூடிய விஷயம்தான்.

### பழக வேண்டாமா?

வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள்கள் இறக்குமதியாவதை அறவே நிறுத்திவிட இந்திய சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். அந்தத் தீர்மானத்தை அவர்கள் மாற்றிக் கொள்ளப் போவதில்லை. மாற்றிக் கொள்வது நாட்டின் நலனுக்கும் க்ஷேமத்துக்கும் உகந்ததல்ல. இறக்குமதி நின்று பாழாய்ப் போன பருவகாலங்களும் சேர்ந்திருக்குமாயின் நெருக்கடி முற்றாமல் என்ன செய்யும்? அத்தகைய நெருக்கடியைச் சமாளிப்பதற்கு இப்போது முதற்கொண்டே வழிவகைகளைத் தேடவேண்டியது அத்தியாவசியம் அல்லவா?

உலக நாடுகளில் சுபிட்சமும் அமைதியும் நிலவினாலன்றி இறுதியில் அமெரிக்காவும் பாதிக்கப்படும் என்று அமெரிக்க சர்க்கார் கருதுகிறார்கள். அப்படியிருக்க, ஒரே நாட்டைச் சேர்ந்த ஒரு பாகத்தில் ஏற்படும் கஷ்ட நஷ்டங்கள் மற்ற பாகங்களையும் பாதித்தே தீரும் என்பது சர்வ நிச்சயம். ஆகையால் சமஸ்தானங்களும் மாகாணங்களும் ஒன்றுபட்டுள்ள ஐக்கிய இந்தியக் குடியரசு சுபிட்சத்துடனும் அமைதியுடனும் இருக்க வேண்டுமாயின் எல்லா பாகங்களும் சுபிட்சமாக இருக்க வேண்டும். இல்லாவிடில் சுபிட்சமுள்ள பிரதேசங்கள் சுபிட்சமற்றப் பிரதேசங்களுக்கு உதவி புரியவேண்டும். இதிலிருந்து உணவுப் பற்றாக் குறை ஏற்பட்டுள்ள மாகாணங்களுக்கு, உபரியாக உணவு உற்பத்தியாகும் மாகாணங்கள் உதவி புரிய வேண்டியது அவசியம் என்றாகிறது. இவ்விஷயத்தை இந்திய சர்க்காரும் வற்புறுத்தி வருகிறார்கள்.

இதைத் தவிர, பிற பிரதேசங்களையே முற்றிலும் நம்பிக் கொண்டிராமல் ஜனங்கள் உணவு பற்றாக் குறையைச் சமாளிக்கவும் வழி தேட வேண்டும். அதாவது உணவு உற்பத்தியைப் பெருக்க முயற்சிப்பது ஒரு புறமிருக்க, சோளம், கம்பு, கேழ்வரகு, மரவள்ளி, சர்க்கரை வள்ளிக் கிழங்குகள் போன்ற சத்துள்ள உணவுப் பண்டங்களை அதிகமாக உபயோகத்துக்குக் கொண்டுவரவும் பழக வேண்டும். இவ்வாறாக, பலவிதத்திலும் பரிகார முறைகளைக் கைக்கொண்டால்

## சிறந்த சலவை...




EAZ 15 TM

தயாரிப்பவர்கள்:

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட்

மதராஸ்

---

## லோத்ரா




கர்ப்பாசய ரோகங்களை நிவர்த்திக்க வல்ல சிறந்த ஔஷதம். ஸ்திரீகளுக்கு ஆரோக்கியமும் சந்தோஷமும் அளிப்பது.



**கேஸரி குடீரம் லிமிடெட், மதராஸ் 14.**

ஒரிஸ்ஸா, நிஜாம் ஸமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ்நாடு முதலிய இடங்களுக்கு ஏஜெண்டுகள்
சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெரம்பூர், செகந்திராபாத், பெஜவாடா, மதுரை

ஜுபிடரின்

# கிருஷ்ண விஜயம்

எல்லோரும் விரும்பும்
உல்லாசச் சித்திரம்....

இப்பொழுது சென்னை
கெயிட்டி & கிரௌன்
மற்றும் ராஜதானி பூராவும் நடைபெறுகிறது

டைரக்ஷன் சங்கர் ராவ் நட்கர்ணி



தமிழ் நாட்டு மக்களின் உள்ளத்தில்
மகிழ்வுடன் உலாவி வருகிறார்கள்.



மாடர்ன் தியேட்டர்ஸ்

# பொன்முடி

இப்பொழுது தென்னாடெங்கும்
வெற்றிகரமாக நடைபெறுகிறது

உங்கள் குழந்தைக்கு வியாதி வெக்கையாக இருந்தால்

B. C. P. W.'

# கிரைப் மிக்ஸர்

உபயோகியுங்கள்



வயிற்றுப் பொருமல், அஜீரணம், சீதபேதி, பல் வளரும்போது ஏற்படும் வயிற்றுப் போக்கு மற்றும் இதர வியாதிகளையும் தடுப்பதோடு இதமளித்து சொஸ்தம் செய்கிறது

## பெங்கால் கெமிகல்

அண்டு பார்மசூடிகல் ஒர்க்ஸ் லிமிட்.
கல்கத்தா : பம்பாய் : கான்பூர்

●

ஏஜண்டுகள் :
என். தேசாய் கௌடர் & கோ.
41, பந்தர் தெரு :: சென்னை




# 'ஜீவான்ஜன்'

சரீரத்தின் மேல் தடவி
தேய்ப்பதற்கும் ஆவியாக
சுவாசிப்பதற்கும்
உபயோகரமானது
ரஸாயனக் களிம்பு, மிருக
கொழுப்பு சேராதது

தயாரிப்பவர்கள்
ஜீவான்ஜன் லாபொரட்டரீஸ் லிட்
மதராஸ்-14




சோல் ஏஜண்டுகள்
கே.கே.பிள்ளை & கோ
ராயப்பேட்டை_மதராஸ்-14

# ஜீவான்ஜன்

# மானம் மரியாதை கற்பு

எல்லாவற்றிற்கும் விலையா

# இந்தப் பணம்?

குமுறிய உள்ளத்திலிருந்து
எழும் கேள்வி



ஏவி எம்
புரொடக்ஷன்ஸ்

# வாழ்க்கை

இந்த வருஷத்தின் வெற்றிகரமான திரை ஓவியம்

இப்போது மகோன்னத வெற்றியுடன்
**50 நகரங்களில்**
நடைபெறுகிறது

AVM
புரொடக்ஷன்ஸ்